2075

# யாக்ஞவல்கியர் - ஜனக மன்னர் உரையாடல்




அறந்தை மணியன்

அருணோதயம்
19 கண்ணதாசன் சாலை
தியாகராய நகர்
சென்னை - 600 017

20-5

## முன்னுரை

மகரிஷி யாக்ஞவல்கியர், திருமாலின் அம்சமாக மண்ணுலகில் அவதரித்தவர் என்று கருதப்படுகிறது. சூரிய பகவானிடமிருந்து 'சுக்லயஜுர் வேதத்'தை நேரடியாகப் பயின்று உலகுக்கு அளித்தவர் யாக்ஞ வல்கியர். யோகிகளில் 'யோகீஸ்வரர்' என்றழைக்கப் படுபவர் இவர் மட்டுமே! இன்றும் சிரஞ்சீவியாக வாழ்ந்து கொண்டிருப்பவர் என்று நம்பப்படும் இவரது வரலாறு இத்தொகுதியின் முதல் பாகத்தில் தொகுக்கப் பட்டது.

மிதிலையை ஆண்ட மன்னர் ஜனகர் 'ராஜரிஷி' என்று கருதப் பட்டவர். அவரே வேத, வேதாந்தங்களில் பரிச்சயமுடைவர். ஜனக மன்னர் பல சந்தர்ப்பங்களில் மகரிஷி யாக்ஞவல்கியருடன் உரையாடித் தமது ஐயப் பாடுகளைக் களைந்து கொண்டார். அந்த உரையாடல்கள் இந்த இரண்டாவது பாகத்தில் தொகுத்துத் தரப் பட்டுள்ளன.

யாக்ஞவல்கியருடன், உத்தாலகர், சித்ரரதர், விஸ்வாவசு, அஸ்வலர், அர்த்தபாகர், புஜ்யூ, உஷஸ்தஸ், கஹோலர், கர்கி, காத்யாயனி, மைத்ரேயி ஆகியோரும் பல்வேறு சந்தர்ப்பங்களில் வாதங்களும், விவாதங் களும் நடத்தியிருக்கிறார்கள். அவையும் தொகுக்கப் பட்டு மூன்றாவது பாகமாக வெளியிடப் பட்டுள்ளன.

*- பதிப்பகத்தார்*

1. அக்னிஹோத்ரம் குறித்த உரையாடல் 5

2. 'ப்ரகிருதி' குறித்த உரையாடல் 9

3. 'கால அளவுகள்' மற்றும் 'குணங்கள்' குறித்த உரையாடல் 11

4. மகாப்ரளம் குறித்த உரையாடல் 16

5. யோக சாதனை மற்றும் யோகிகள் குறித்த உரையாடல் 18

6. 'வாக்கு'தான் 'ப்ரம்மம்' என்பது குறித்த உரையாடல் 24

7. "ஆன்மாவுக்கு ப்ரபஞ்சத்துடன் உள்ள தொடர்பு" குறித்த உரையாடல் 31

8. மானிடர்க்கு வழிகாட்டும் ஒளியைக் குறித்த உரையாடல் 36

9. விழிப்பு, உறக்கம், கனவு ஆகியவை குறித்த உரையாடல் 39

10. "ஆன்ம - ஞானம்" பிறவித் தளையிலிருந்து விடுதலை பெற உதவும் என்பது குறித்த உரையாடல் 42

11. மரணத்தின் போது ஜீவாத்மாவின் அவஸ்தைகள் குறித்த உரையாடல் 45

12. மரணத்திற்குப் பிறகு ஜீவாத்மா போகும் இடங்களைக் குறித்த உரையாடல் 52

13. "ஆசையெனும் சாத்தான்" - என்பது குறித்த உரையாடல் 55

14. 'பிரம்மத்தை உணருவதே' முக்திக்கான வழி 61

# யாக்ஞவல்கியர் - ஜனக மன்னர் உரையாடல்

## 1. அக்னிஹோத்ரம் குறித்த உரையாடல்

**ஜனக மன்னர்:** *ஓ மாமுனியே! நீங்கள் எவ்வாறு 'அக்னிஹோத்ரம்' என்ற மிக முக்கியப் பணியை தினசரி மேற்கொள்ளுகிறீர்கள்?*

**யாக்ஞவல்கியர் :** வேதங்களையும், சாஸ்திரங்களையும் புரிந்து வைத்துள்ள வேந்தே! 'அக்னிஹோத்ரம்' ஒவ்வொரு நாளும் இருமுறை செய்யப்பட வேண்டும் அதிகாலையில் சூரியன் உதிப்பதற்கு முன்பும், அந்திவேளையில் சூரியன் மறைந்த உடனும் நான் 'அக்னிஹோத்ரம்' செய்கிறேன். சூரியன் அக்னி இருவருமே நமக்கு வெப்பத்தைக் கொடுக்கிறார்கள். அதிகாலையில் செய்யும்போது, 'அக்னி' மூலமாக சூரியனுக்கு 'ஆஹூதி' செய்து 'ஹவிஸ்' அளிக்கிறோம்; அஸ்தமனம் ஆனவுடன், 'அக்னி' மூலமாக அக்னிக்கே' 'ஹவிஸ்' அளிக்கிறோம்.

**ஜனக மன்னர்:** இதனால் கிடைக்கும் நற்பயன்கள் என்ன?

**யாக்ஞவல்கியர் :** நாம் 'அக்னி' யில் இடும் சமித்துக் கள் (குச்சிகள்) நெய்யில் எரிகின்றன. பசுஞ்சாணத்தி லிருந்து உருவாக்கப்பட்ட வறட்டிகளும், நாம் இடும் பால், பார்லி, அரிசி ஆகியவையும் அந்த

'அக்னி'யில் நெய்யுடன் சேர்ந்து எரிக்கப்படும் போது, அதிலிருந்து வெளிப்படும் புனிதப்புகையால் சுற்றுப்புற சூழல் தூய்மையடைகிறது. 'அக்னிஹோத்ரம்' செய்பவனுக்கு திருமகளின் அருள் கிட்டுவதால், செல்வமும், உடல்நலமும், புகழும் கிடைக்கின்றன. அத்துடன் அவன் பரலோகம் செல்லும் போது சூரியன் அக்னி ஆகியோருடன் இணைந்து வாழும் தகுதியைப் பெறுகிறான்.

அதிகாலையில் 'அக்னிஹோத்ரம் ... செய்யப் பட்டால் சூரியன் மகிழ்ச்சியடைகிறான். மாலையில் அவன் மறைந்த வுடன் இதர தேவர்களும் அவரவர் உலகங்களுக்குத் திரும்பத் தொடங்குகிறார்கள். உடனடியாக நாம் 'அக்னி'யைத் துதித்து 'அக்னிஹோத்ரம்' செய்யும் போது, மற்ற தேவர்களும் சற்று காத்திருக்கிறார்கள். நாம் 'அக்னி'க்கு 'ஹவிஸ்' அளிக்கும் போது 'அக்னி' மட்டுமல்லாது இதர தேவர்களும் மகிழ்ச்சியடைகின்றனர்.

**ஜனக மன்னர் :** ஓ மாமுனியே ... நீங்கள் காலையும் மாலையும் 'அக்னிஹோத்ரம்' செய்ய வேண்டுமெனக் குறிப்பிட்டீர்கள். அந்தந்த வேளைகளில் என்ன விளைவுகள் ஏற்படுகின்றன என்று சொல்ல முடியுமா?

**யாக்ஞவல்கியர் :** சொல்கிறேன் மன்னவா ...அந்தி மாலையில் 'அக்னிஹோத்ரம்' செய்யும் போது அந்த ஆஹூதி, ஆகாயத்தை அடைகிறது. அதனால் ஆகாயமே 'ஆகவனீயம்' அல்லது 'ஸ்ரௌதாக்னி'யாக மாறி விடுகிறது. வாயுவே 'சமித்துக்களாக' மாறிவிடுகிறது.

அதிகாலையில் 'அக்னிஹோத்ரம்' செய்யும்போது, பகல் நேரமே 'ஆகவனீயம்' ஆகிறது; சூரியனே 'சமித்துக்களாகி' விடுகிறான்; சந்திரன் 'ஆஹுதி' யாகிறான்; இதனால் அக்னியும் திருப்தியடை கிறான். மாலையில் அந்த 'ஆஹுதி' (சந்திரன்) திரும்பவரும் போது, (அதாவது, சூரியன் மறைந்த வுடன் இந்த பூமியே 'ஆகவனீய அக்னி'யாக மாறுகிறது; 'அக்னி'யே 'சமித்துக்களாகிறான்; மாலையில் அக்னியில் இடப்படும் சில மருத்துவ மூலிகைகள் 'சுத்த ஆஹுதி'களாகின்றன. இதனால் இந்த பூமி திருப்தியடைகிறது. இப்படியாக இந்த வட்டம் நிறைவு பெறுகிறது.

இப்படி தினமும் இந்த 'அக்னிஹோத்ரத்தை' நிறைவு செய்யும் மனிதனின் வாயே 'ஆகவனிய'மாக மாறுகிறது. அவனது 'நாக்கு' 'சமித்துகளாகி'றது அவன் உண்ணும் உணவே 'ஆஹுதி'யாகிவிட, அக்னிஹோத்ரம் அவனது உடலிலும் நிகழுகிறது.

அதனால் மனிதனுடைய உடல் தூய்மையாகிறது. வலுவடைகிறது. ஆகவே அவனது மனைவியின் உடல் 'ஆகவனிய அக்னி'யான நிலையில், அவன் தனது காம இச்சை எனும் சமித்துக்களால் அவளுடன் கூடும் போது அவனது 'விந்து'வே 'ஆஹுதி' ஆகிறது. கூடலே 'அக்னி ஹோத்ரம்' ஆகிவிடுகிறது. பிறக்கும் குழந்தையும் அழகும், வலுவும், புத்திசாலித்தனமும் கொண்டதாகப் பிறக்கிறது.

மீண்டும் ஒரு முறை இந்த 'அக்னிஹோத்ர வட்டம்' பூர்த்தியடைகிறது.

**ஜனக மன்னன்** : அக்னிஹோத்ரத்திற்கு தேவையான எரிபொருள் என்ன?

**யாக்ஞவல்கியர்** : பசுவின் பாலும், பசு நெய்யும், பசும் சாணத்தின் வறட்டியும், மரக்குச்சிகளான சமித்துகளும் தான் எரிபொருட்கள்.

**ஜனக மன்னன்** : நெய் மட்டும் கிடைத்து, பசுவின் பால் கிடைக்காதபோது, என்ன செய்வது?

**யாக்ஞவல்கியர்** : அரிசியும், பார்லியும் பயன்படும்.

**ஜனக மன்னன்** : அவையும் கிடைக்கவில்லை யெனில்...?

**யாக்ஞவல்கியர்** : மூலிகைகள், பழங்கள், ஆகியவற்றை 'ஆஹுதி'களாக இடலாம்.

**ஜனக மன்னன்** : நல்லது மகிரிஷி... 'அக்னி ஹோத்ரம்' குறித்த எனது ஐயப்பாடுகளை நீக்கினீர்கள். இனி இதர விஷயங்களைப் பற்றியும் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

## உ. 'ப்ரகிருதி' குறித்த உரையாடல்

ஜனக மன்னர் : 'ப்ரகிருதி' குறித்து விரிவாகச் சொல்லுங்கள் முனிவரே:

யாக்ஞவல்கியர் : சொல்கிறேன் மன்னா! 'ப்ரகிருதி' யின் தத்துவங்கள் (அல்லது உள்ளடக்கம்) எட்டு அவை:

1. அவ்யக்தம், 2. மஹத், 3. அஹங்காரம், 4. பூமி, 5. நீர், 6. அக்னி, 7. வாயு, 8. ஆகாயம்.

ஜனகர் : 'விக்ருதி'கள் என்பவை யாவை?

யாக்ஞ : அவை பதினைந்தாகும்

1. காது 2. தோல் 3. கண்கள் 4. நாக்கு 5. மூக்கு 6. ஒலி 7. தொடு உணர்ச்சி 8. வடிவம் 9. ருசி அல்லது சுவை 10. மணம் (வாசம்) 11. பேச்சு 12. கைகள் 13. கால்கள் 14. மலக் குடல் 15. பிறப்புறுப்புக்கள்.

தத்துவஞானிகள் 'மனது' என்பதைப் பதினாறாவது 'விக்ருதி' என்று கருதுகிறார்கள். எட்டு 'ப்ரக்ருதி'களும் பதினாறு 'விக்ருதி'களும் சேர்ந்து 24 தத்துவங்களா கின்றன.

ஜனகர் : மாமுனியே, இந்தப் ப்ரகிருதி'களின் படைப்புகள் எத்தனை வகைப்படும்?

யாக்ஞ : அவை ஒன்பது வகைப்படும். 'மூலப்ரகிருதி'யான 'அவ்யக்தத்'திலிருந்து இரண்டாவது ப்ரகிருதி யான 'மஹதாத்மா' பிறக்கிறது. இது முதல் 'படைப்பு'. இந்த 'மஹதாத்மா'விலிருந்து

'அஹங்காரம்' பிறக்கிறது. இது மூன்றாவது 'ப்ரகிருதி'. (அஹங்காரம், புத்தியாத்மகம்' என்றும் அழைக்கப்படுகிறது) இந்த 'அஹங்காரத்' திலிருந்து 'மனது' பிறக்கிறது. இது மூன்றாவது படைப்பு. இந்த 'மனதிலிருந்து தான் 'ஒலி' தொடு உணர்ச்சி, வடிவம்' 'சுவை' மற்றும் 'மணம்' தோன்றுகின்றன. (ஆகவே காது, தோல், கண்கள், நாக்கு, மூக்கு, இவை ஐந்தும் 'கர்ம இந்திரியங்கள், என்று அழைக்கப்படுகின்றன) இந்த ஐந்தும் சேர எட்டுப் படைப்புக்கள் ஆகின்றன. ஒன்பதாவது படைப்பு 'வாயு' ஆகும். வாயுக்கள் மூன்று வகைப் படும். அவை:

1. பிராண வாயு,
2. பக்கவாட்டில் செல்லும் சமன, உதான, தியான, வ்யான' வாயுக்கள்
3. கீழ்நோக்கிச் செல்லும் 'அபான'வாயு

# 3. 'கால அளவுகள்' மற்றும் 'குணங்கள்' குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே 'கால அளவுகள்' குறித்த விளக்கங்களைத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

யாக்ஞ : மன்னவா… மானிடர்களின் ஒரு 'கல்ப' காலத்தில் உள்ள ஆண்டுகளின் எண்ணிக்கையை பத்தாயிரத்தால் பெருக்கினால் கிடைக்கும் மொத்த ஆண்டுகளே 'பரப்ரம்மத்'தின் ஒரு 'பகல்' ஆகும்… அதே எண்ணிக்கைதான் ஓர் 'இரவு'க்கும்! அந்த 'இரவில்' தூங்கி மறுநாள் விழித்தெழும் பரப்பரம்மம், மனிதர்களுக்குத் தேவையான தாவரங்களையும், மூலிகைகளையும் படைக்கிறார். பின்னர் 'பொன் முட்டை' ஒன்றிலிருந்து 'ப்ரம்மா'வைப் படைக்கிறார். ஒரு 'தேவர்களின் ஆண்டு' முழுவதும் ப்ரம்மா அந்தப் பொன் முட்டையில் தூங்கியிருப்பார். அதிலிருந்து வெளிவரும் ப்ரம்மா, அந்த 'முட்டை'யின் பாதியிலிருந்து விண்ணுலகையும், மறுபாதியிலிருந்து, மண்ணுலகையும் படைக்கிறார். அந்த இரண்டு பாதிகளுக்கும் இடைப்பட்ட பகுதியே 'ஆகாயம்' எனப் படுகிறது.

'அவ்யக்தம்' தான் பரப்ரம்மம்;

'மஹத்' தான் ப்ரம்மம்

ப்ரம்மம் அஹங்காரத்தைப் படைக்கிறது

மானுடர்களின் 7,500 கல்ப ஆண்டுகளின் மொத்த எண்ணிக்கையே ப்ரம்மாவின் ஒரு பகல்; அதற்கிணையான எண்ணிக்கையுள்ள ஆண்டுகளே ப்ரம்மாவின் ஓர் இரவு.

ப்ரம்மா தமது உடலிலிருந்தே நான்கு மகன்களை உருவாக்கினார். அவர்களே ஆதி மனிதர்கள்; நமக்கெல்லாம் முன்னோர்கள்.

அவர் ஆகாயம், பூமி, நீர், நெருப்பு, காற்று ஆகிய 'பஞ்ச பூதங்களையும்' படைக்கிறார். அவற்றிலிருந்துதான் மானிடர்களின் ஐந்து ஞான இந்திரியங்கள் உருவாகின்றன.

ஒளி, தொடு உணர்ச்சி, வடிவம் சுவை மற்றும் மணம் ஆகிய ஐந்தும் 'விசேஷ விக்ருதிகள்' எனப்படும். பஞ்ச பூதங்களும் இந்த ஐந்து விசேஷ விக்ருதிகளும் எல்லா உயிரினங்களிலும் காணப்படும். அவை ஒன்றுக்கொன்று மோதிக்கொண்டு தங்களுக்குள்ளேயே சண்டையிட்டுக் கொள்ளுகின்றன. மற்றவற்றை ஆளுமை செய்ய ஒவ்வொன்றும் முயற்சிக்கின்றன.

அவை 'அவ்யாய' என்ற 'குணத்தால்' தூண்டடப்படுகின்றன. அக்குணம் அழிவுக்கு இட்டுச் செல்லக்கூடியது. வலிமையற்று இருக்கும் ஏதாவது ஒரு விசேஷ விக்ருதி செயலிழக்கிறது (குருடு, செவிடு, ஊமை, போல)

ஜனகர் : இதர குணங்கள் யாவை?

யாக்ஞ : ஐந்து இந்திரியங்களும், நமது 'மனதும்' மொத்தம் ஆறு குணங்கள். இந்திரியங்களின் தூண்டுதலால் தான் பொருட்களின் மீது மனதின் கவனம் ஈர்க்கப்படுகிறது. இந்திரியங்கள் தாமாகவே எதையும் உய்த்துணர முடியாது. 'மனது'தான் இந்திரியங்கள் மூலமாக பார்க்கிறது, கேட்கிறது, தொட்டுணர்கிறது, சுவையை அறிகிறது, மற்றும் மணத்தை நுகர்கிறது. மனது வேறெதைப் பற்றியோ சிந்தித்துக் கொண்டிருக்கும் போது, எதிலிருக்கும்

பொருளையே கூடப் பார்க்காமல் இருக்கலாம்; அருகிலிருந்து எழுப்படும் ஓசையைக் கேட்காமல் இருக்கலாம்; நறுமணத்தை உணராமல் போகலாம். மனிதனின் செயல்பாடு நின்று விட்டால், இந்திரியங்களால் எந்தப் பயனும் இல்லாமல் போய்விடும். ஆக, மனதுதான் இந்திரியங்களின் தலைவன், இந்திரியங்கள் மனதின் அடிமைகள்!

ஜனகர் : முக்குணங்கள் என்று சிறப்பாகக் குறிப்பிடப் படுபவற்றின் தன்மைகள் யாவை?

யாக்ஞ : அவை:

1. சத்வ குணம்
2. ரஜோகுணம்
3. தமோகுணம்

'சத்வ குணத்தின் தன்மைகளாவன: நன்மை, ஆனந்தம், சக்தி, பிரியம், பிரகாசம், குழப்பமின்மை, அஹிம்சை, சமத்துவம் ஆகியன. அத்துடன் கடந்த காலத்தைக் குறித்து வருந்தாமலிருப்பது, மனது அல்லாடாமல் அலைபாயாமல் தெளிவுடன் இருப்பது, கஞ்சத்தனமின்மை, ஈகைக்குணம், அடுத்தவர் நலனை விரும்புதல், எல்லா உயிரினங்களிடமும் அன்புகாட்டுதல் மற்றும், 'ஆச்சரியம்' ஆகியவையும் 'சத்வ குணத்'தில் அடங்கும்.

அடுத்தது 'ரஜோகுணம்': இதன் தன்மைகளாவன: அழகிய வடிவம், செல்வம் ஆகியவற்றில் விருப்பமுடைமை; தியாகம் செய்ய விரும்பாமை, கோள் சொல்லுதல், தயை, அன்பு ஆகியவை இல்லாதிருத்தல், கேளிக்கைகளில் நாட்டம், எதற்கெடுத்தாலும் அடுத்தவர் மீது பழிபோடுதல், தகறாறு,

விவாதம் செய்தல். அகங்காரம், அடுத்தவர் சொத்தை அபகரித்தல், வெட்க மின்மை, வக்கிர மனப்பான்மை, காம குரோத, மத, த்வேஷ உணர்ச்சிகள் அதிகமாக இருத்தல் - ஆகியவை 'ரஜோகுணத்தில்' அடங்கும்.

அடுத்தது 'தமோகுணம்' (தமஸ் என்றால் இருள்): மோஹம், அறியாமை, ஒளியின்மை, குரோதம், மரணத்தில் மகிழ்ச்சி, அடங்காப்பசி, குடிப் பழக்கம், ஆடை ஆபரணங்கள், வாசனைத் திரவியங்கள், ஆடம்பர இருக்கைகள், அலங்காரப் படுக்கைகள், பகலில் உறக்கம், கலைகளில் அதிக ஈடுபாடு, எதிலும் அக்கறையின்மை - ஆகியவை தமோ குணத்தின் தன்மைகளாகும்.

ஜனகர் : இந்த மூன்று குணங்களின் சிறப்புத் தன்மைகள் என்னென்ன?

யாக்ஞ : தத்துவ ஞானிகள் 'சத்வ குணம்' மேலானது என்றும் 'ரஜோகுணம்' இடைப்பட்டது என்றும் 'தமோ குணம்' மிகவும் கீழ்மையானதென்றும் கருதுவர். இந்த முக்குணங்களும் 'ப்ரகிருதி'யுடன் இணைந்து எக்காலமும் இப்பிரபஞ்சத்தில் நிலைத் திருக்கும். இக் குணங்களின் காரணமாகவே பரமாத்மாவிலிருந்து தேவர்களும், அரக்கர்களும், மனிதர்களும் தோன்றி பல்வேறு குணங்களுடைய வர்களாகக் காட்சியளிக்கிறார்கள்.

ஜனகர் : அப்படியானால், தேவர்கள் 'சத்வ குணம் கொண்டவர்கள், மனிதர்கள் 'ரஜோ குணம்' கொண்டவர்கள் அரக்கர்கள் 'தமோ' குணம் கொண்டவர்கள் - என்று சொல்லலாமா?

யாக்ஞ : அப்படி திட்டவட்டமாகப் பிரித்துச் சொல்லிவிட முடியாது. மூன்று வகையினரும் இம்மூன்று

குணங்களும் பல்வேறு விகிதாச்சாரங்களில் கலந்து காணப்படுபவர்களே அதிகம். 'சத்வ' குணம் அதிகமாக இருப்பவர்கள் 'தேவர்கள்' என்றும் (அல்லது தெய்வாம்சம் கொண்டவர்கள்) 'ரஜோ குணம் அதிகமாக இருப்பவர்கள் மனிதர்கள் என்றும் தமோ குணம் அதிகம் உள்ளவர்கள் அரக்கர்கள் என்றும் வேண்டுமானால் குறிப்பிடலாம். இம்முக்குணங்களில் 'ரஜோ' மற்றும் 'தமோ' குணம் சரி பாதியாக அமையப் பெற்ற உயிர்களே விலங்குகளும், பறவைகளும் என்று கொள்ளலாம்!

'அவ்யாய' என்றும் 'மூலபுருஷன்' என்றும் அழைக்கப்படும் 'பரப்ரம்மமும்; அவ்யக்த என்றழைக்கப்படுகிற ப்ரகிருதியும் வேறு வேறானவை; இரண்டும் தோற்றமும் அழிவும் இல்லாதவை; அவற்றின் குணங்களும் நிலை யானவை; நம்மால் காண இயலாத குணங்கள் அவை. இதனால் பரம்பொருள் குணமற்றது என்றும் நம்புகிறோம். ஸ்படிகம் நிறமில்லாதது. அதன் அருகிலுள்ள பொருளின் வண்ணத்தை ஸ்படிகம் பிரதிபலிக்கிறது. அதே போல பரம் பொருளும் ப்ரகிருதியின் குணங்களை பிரதி பலிப்பதுபோல் தோன்றுகிறது. ஏனெனில் 'ப்ரகிருதி'க்குப் பல குணங்கள் உண்டு. அக் குணங் களுக்கேற்றவாறு ப்ரகிருதி செயல்படுகிறது. அக்குணங்களை வெல்ல ப்ரகிருதியால் முடியாது. இக்காரணத்தினால்தான் தேவர்களும் மனிதர் களும், அரக்கர்களும், விலங்குகளும், பறவை களும், தாவரங்களும், பல்வேறு குணங்களைக் கொண்டவையாகவும் அவற்றை வெல்ல முடியாத வையாகவும் காணப்படுகின்றன.

# 4. மகாப்ரளம் குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே ... ஆதியந்தமில்லா அந்தப் பரம் பொருளின் சக்தியால் உண்டாகும் பிரளயம் குறித்த தகவல்களை அறிந்து கொள்ள விழைகிறேன்...

யாக்ஞ : மன்னவா... மானிடர்களின் 7,500 கல்ப காலங்கள் முடிந்ததும் (அதாவது ப்ரம்மனின் ஒரு பகல் நேரம்) பிரம்மன் உறங்கச் செல்கிறான். ஆகவே, அவனையும் படைத்த அந்த பரப்பிரம்மன், (அவ்யக்தர் என்றும் அழைக்கப்படுபவர்) தனது 'ருத்ர' வடிவங்களில் ஒன்றை எடுத்துக் கொள்கிறார். அந்த 'ருத்ர' வடிவம் பன்னிரண்டு 'அக்னி'களுக்கு சமம். ஒவ்வொர் அக்னியும் நூற்றுக்கணக்கான சூரியன்களின் மொத்த வெப்பத்துக்குச் சமம். அந்த ருத்ரர் தமது 'தேஜஸ்' மூலமாக நான்குவித உயிரினங்களை அழிக்கத் தொடங்குகிறார். எலும்பு மஜ்ஜை உள்ளவை அல்லது அதிலிருந்து உண்டானவை; முட்டையிலிருந்து வெளிவரக் கூடிய உயிரிகங்கள்; வியர்வையில் உண்டாகும். நுண்ணுயிர்கள் மற்றும் மண்ணிலிருந்து கிளம்பும் தாவரங்கள் ஆகிய நான்கு வகை உயிரினங்களும் கண்ணிமைக்கும் நேரத்தில் அழிக்கப்படுகின்றன.

அசையும், அசையாப் பொருட்கள் எல்லாமே அழிக்கப்படுவதால் பூமியை நீர் சூழ்ந்து கொள்ளுகிறது. நீர்க்கோளமாகக் காட்சியளிக்கிறது. தொடர்ந்து ருத்ரர் தமது சக்தியால் ப்ரளாயாக்னி' எனப்படும் 'ப்ரளயகால - நெருப்பை' உருவாக்கி,

பூமியைச் சூழ்ந்திருக்கும் நீரை ஆவியாக்குகிறார். இதனால் பூமியின் மேற்பகுதி முழுவதும் வறண்டு போய், ஆமையின் முதுகு போலக் கடினமாகி விடும். நீர் முழுவதும் வற்றிப் போன பிறகும் அந்த 'அக்னி' தொடர்ந்து எரிந்து கொண்டிருக்கும். அக்னிக்கு அப்போது ஏழு நாக்குகளும் ஏராள மான 'சக்தி' யும் இருக்கும்.

அந்த 'அக்னி'க்கும் ஒரு முடிவு வரும்; ஆம், வாயு தனது எட்டு விதமான வடிவங்களைக் கொண்டு அந்த அக்னியை விழுங்கி எல்லாத் திசையிலும் விரையும், அந்த எண் திசை வாயுவையும், பூமியை சுற்றியுள்ள விரிந்து பரந்த ஆகாயம் விழுங்கி விடும். இப்படியாக 'மண்' ஆக இருந்த பூமியும், இப்பிரபஞ்சமும், நீர் எனும் பூதத்தால் மூழ்கடிக்கப் பட, அந்த நீரை 'அக்னி' எனும் பூதம் விழுங்க அந்த அக்னியை வாயு எனும் 'பூதம்' தன்னுள் அடக்கிக் கொள்கிறது.

# 5. யோக சாதனை மற்றும் யோகிகள் குறித்த உரையாடல்

ஜனகர் : யோக சாதனை மற்றும் யோகிகளின் தன்மை குறித்து தெரிந்து கொள்ள விரும்புகிறேன் மாமுனியே!

யாக்ஞ : சொல்கிறேன் மன்னவா ... யோக சாதனைக்கு இணையான சக்தி வேறெதுவும் இல்லை. யோகி கள் கண்டுணர்வதும், அவர்களது அனுபவங் களும், ஞானிகளின் பார்வைக்கும் அனுபவங் களுக்கும் இணையானவையே! யோகசாதனைக்கு பிராண வாயு மட்டுமல்ல, யோகியின் எல்லா உறுப்புக்களும் இந்திரியங்களும் கூட முக்கியமானவை.

யோகிகள் தங்களது சுவாசத்தைக் கட்டுப்படுத்தி, அடக்கி வைத்துக்கொள்ளுகிறார்கள். அத்துடன் தங்களது பூதவுடலை விட்டு நீங்கி, சூட்சும உடலில் நுழைந்து கொண்டு எங்கு வேண்டு மானாலும் போய் வரும் சக்தியைப் பெறுகிறார் கள். யோகிகளின் சூட்சும உடலுக்கு அணிமா, மஹிமா போன்ற 'அஷ்டமா சித்திகள்' உண்டு. அவர்களுக்கு எட்டுவிதமான குணங்கள் உண்டு. அதே போல யோகசாதனைக்கும் எட்டு விதமான 'அங்கங்கள் உண்டு. அதனால்தான் 'அஷ்டாங்க யோகம் என்றழைக்கப் படுகிறது.

யோகிகளின் செயல்பட்டில் மிகச் சிறந்தவை இரண்டு. அவை. 'சகுண' மற்றும் 'நிர்க்குண'.

யோகிகள் 'சகுண பிராணாயாமத்'தில் கர்ம இந்திரியங்களையும் ஞான இந்திரியங்களையும் கட்டுப் படுத்திக் கொள்ளுகிறார்கள்.

இரண்டாவது 'நிர்குண பிராணயமாயத்'தில் தங்களது சிந்தையை ஒரே நோக்கில் நிலைப் படுத்தி, இந்திரியங்களை ஒதுக்கிவிட்டு... ஏகாக்ர சிந்தனையுடன் தியானிக்கிறார்கள்.

முதல் வகையில் மூச்சு கட்டுப்படுகிறது; இரண்டா வதில் சிந்தனை நிலைப்படுகிறது. சிந்தனையை ஒருங்கிணைக் காமல் மூச்சை மட்டும் கட்டுப் படுத்துவதால், துன்பம் விளையும்.

இரவின் முதல் யாமத்தில், யோகிகள் பன்னிரண்டு முறை ப்ராணாயாமம் செய்கிறார்கள். பின்னர் உறங்கச் செல்கிறார்கள். அதிகாலையில் விழித் தெழுந்தவுடன் மீண்டும் பன்னிரண்டு முறை ப்ராணாயாமம் செய்கிறார்கள். அப்போது அவர்கள் தங்கள் ஆன்மாவை, பரமாத்மாவுடன் பிணைத்துக் கொள்கிறார்கள். அத்துடன் தங்களது இந்திரியங்களின் செயல்பாட்டைக் கட்டுப் படுத்தி மனதுடன் பிணித்துக் கொள்ளுகிறார்கள். புத்தியை ப்ரகிருதியுடன் இணைத்துக் கொள்கி றார்கள்.

ஜனகர் : யோகத்தில் ஆழ்ந்திருக்கும் யோகியின் உடலசை வுகளும் பிற நடவடிக்கைகளும் எவ்வாறிருக்கும் என்று சொல்வீர்களா?

யாக்ஞ : மிக திருப்தியுடன் வாழ்ந்து கொண்டு, ஆழ்ந்த உறக்கத்தில் இரவைக் கழிக்கும் ஒருவனைப் போன்று தான் யோக சமாதி நிலையில் ஆழ்ந்தி ருக்கும் ஓர் யோகியும் காணப்படுவார். காற்று வீசாத ஓரிடத்தில், நிறைய எண்ணெய் ஊற்றப் பட்டு எரிந்து கொண்டிருக்கும் ஓர் அகல் விளக்கின் சுடர் எவ்வாறு ஆடாது அசையாது

நிலைத்திருக்குமோ, அவ்வாறே யோகியின் நிலையும் இருக்கும். ஒரு கருங்கல்லின் மீது எவ்வளவுதான் மழை கொட்டினாலும் எப்படி அந்தக் கல்லுக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படுவதில்லையோ அப்படியே யோகியும் எந்தவித பாதிப்பையும் அடைய மாட்டார். காதுக்கினிய இசையோ, கர்ணகடூரமான ஓசையோ அவரது கவனத்தை சிதறடிப்பதில்லை. ஓர் உலோகப் பாத்திரத்தின் விளிம்புவரை எண்ணையை நிரப்பிக் கொண்டு ஒரு வீட்டின் மாடிப் படிகளில் ஏறிக் கொண்டிருப்பவன், ஒரு சொட்டு எண்ணெய் சிந்தினாலும், அவன் தண்டிக்கப் படுவான் என்ற நிர்ப்பந்தத்தில் எவ்வாறு கவனத்துடன் ஏறிப் போவானோ அவ்வாறிருக்கும் சமாதியில் அமர்ந்திருக்கும் யோகியின் மனக்கட்டுப்பாடும்!

ஜனகர் : மாமுனியே... இறப்புக்குப்பின் மனிதனின் ஆன்மா என்ன ஆகிறது, எங்கு போகிறது என்பதை எனக்கு சொல்லுங்கள்!

யாக்ஞ : மன்னா... பூதவுடலிலிருந்து உயிர் எவ்வாறு வெளியேறுகிறது என்பதைப் பொருத்தே, அடுத்து மனித ஆன்மா முதலில் எங்கு செல்கிறது என்பதைக் குறிப்பிட முடியும்.

கால்களின் வழியாக உயிர் பிரிந்தால் ஆன்மா, விஷ்ணு லோகத்திற்கு செல்லும்; மலக்குடல் வழியே வெளி யேறினால், மித்ரலோகத்துக்குச் செல்லும், துடைகள் வழியே வெளியேறினால், பிரஜாபதியின் உலகிற்குப் போகும். மூக்கு வழியாக உயிர் போனால், சந்திர மண்டலத்திற்குப் போய்ச் சேரும். கைகளின் வழியே வெளியேறினால்

இந்திரலோகத்திற்குச் செல்லும்; மார்பு வழியாக வெளி யேறினால், ஆன்மா 'ருத்ரனின்' உலகிற்கு போகும். கண்கள் வழியாக உயிர் வெளியேறினால், ஆன்மா ப்ரம்ம லோகத்திற்கு செல்லும். பின்னர் அந்த மனிதனின் பாவ, புண்ணியங்களுக்கேற்ப அவனது ஆன்மா, மற்றொரு உடலில் புகுந்து கொள்ளும்.

ஜனகர் : ஒரு மனிதன் எத்தனை நாட்களுக்குள் மரணமடைவான் என்பதை அறிந்துகொள்ள முன் கூட்டியே தெரியக் கூடிய அறிகுறிகள் என்னென்ன?

யாக்ஞ : மன்னவா ... ஒருவன் அடுத்த ஒராண்டிற்குள் மரணமடைவான் என்பதற்கு அடியிற் கண்ட மூன்று அறி குறிகளில் ஏதாவது ஒன்று தென் பட்டால் கூடப்போதும்:

1. இரவு நேரத்தில் அவன் வானத்தை அண்ணாந்து பார்க்கும் போது முதல் தடவை அவன் கண்ணில் படும் 'அருந்ததி' நட்சத்திரமும், துருவ நட்சத்திர மும், அடுத்த முறை அவன் கண்ணில் படாமல் மறையும்;
2. அவன் பார்த்துக் கொண்டிருக்கும் போதே முழு நிலவோ அல்லது ஒரு விளக்கின் சுடரோ, வலது பக்கம் பிளந்தது போலக் காட்சியளிக்கும்;
3. எதிரே நின்று கொண்டிருப்பவனின் விழிகளில் தனது பிம்பம் பிரதிபலிக்காமல் மறையும்.

ஒருவன் அடுத்த ஆறு மாதங்களுக்குள் மரண மடைவான் என்பற்கு, அடியிற் கண்ட ஐந்து

அறிகுறிகளில் ஏதாவது ஒன்று தென்பட்டால் கூடப் போதும்:

1. தனது அறிவாற்றல், உய்த்துணர்வு, மற்றும் திறமைகள் மங்கிக் கொண்டிருப்பதாக ஒருவன் உணரும் போது;
2. அவனது சுபாவம். (வழக்கமான தன்மைகள்) பெரும் மாற்றங்களை அடைவது போல அவன் மனத்தினுள்ளும், வெளிப்புற உடலி லும் உணரும் போது;
3. இறைவழிபாட்டைத் திடீரென்று நிறுத்தத் தொடங்கினால்.
4. வேத விற்பன்னர்களை எதிரிகளாகக் கருதத் தொடங்கினால்;
5. உடல் நிறம் ஒரேயடியாக வெளிறத் தொடங்கினால்.

ஒருவன் ஏழு நாட்களுக்குள் மரணமடைவான் என்பதற்கு கீழ்க்கண்ட இரண்டு அறிகுறிகளில் ஏதாவது ஒன்று தென்பட்டால் கூடப்போதும்;

1. சூரிய பிம்பத்தையோ, அல்லது சந்திரனின் பிம்பத்தையோ அவன் பார்க்கும் போது, அவற்றில் சிலந்தி வலையில் இருப்பது போன்ற துவாரங்கள் இருப்பது போல அவன் கண்களுக்குத் தெரிந்தால்;
2. ஒரு கோயிலின் உள்ளே அவன் இருக்கும் போது அங்கு வழக்கமாகக் காணப்படும் தெய்வீக மணங்களுக்குப் பதிலாக, பிண - வாடை வீசுவதாக அவன் உணர்ந்தால்.

ஒருவன் மறு நாளைக்குள் மரணமடைவான் என்பதற்கு கீழ்க்கண்ட மூன்று அறிகுறிகளில் ஏதாவது ஒன்று தென்பட்டால் கூடப் போதும்;

1. அவனது காதுகளும், மூக்கும் கீழ்நோக்கி வளைந்து தொங்கினாலோ; பற்களும் கண்களும் தமது வழக்கமான நிறத்தை இழந்து காணப் பட்டாலோ;
2. புத்திசுவாதீனமும், பிரக்ஞையும் மிகவும் குறைந்து போனால்;
3. அவனது உடல்வெப்பம் குறைந்து குளிரத் தொடங்கினால்.

ஒருவன் உடனடியாக மரணிப்பான் என்பதற்கு கீழ்க்கண்ட இரண்டு அறிகுறிகள் காணப்படும்;

1. திடீரென்று அவனது இடது கண்ணிலிருந்து மட்டும் கண்ணீர் வழிந்தோடும்.
2. அவனது தலையிலிருந்து மேல் நோக்கி புகை எழும்பும்.

மேற்சொன்ன அறிகுறிகள் ஓர் யோகியின் உடலில் தென்பட்டால், அவர் உடனடியாக யோக சமாதி யில் அமர்ந்து பரமாத்மாவுடன் தனது ஜீவாத்மா கலக்க வேண்டுமென்ற தியானத்தைத் தொடங்கி விடுவார்.

# 6. 'வாக்கு'தான் 'ப்ரம்மம்' என்பது குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே ... நமது சொல், வாக்கு, பேச்சு, பேசும் திறமை ஆகியவை மட்டுமே "ப்ரம்மம்" என்று முன்னர் "ஜித்வான்" என்ற முனிவர் என்னிடம் சொன்னார், அது சரிதானா?

யாக்ஞ : அப்படியாயின் "வாக்கு" நம்மிடம் எங்கு உறைகிறது மற்றும் அதற்கு ஆதாரமாக, உதவி கரமாக இருப்பது எது என்று 'ஜித்வான்' குறிப்பிட்டாரா மன்னவா?

ஜனகர் : இல்லை... அதைப் பற்றியெல்லாம் அவர் எதுவும் சொல்லவில்லை...!

யாக்ஞ : மன்னவா... 'வாக்கு' என்பதை நாம் 'வாக்கு-ப்ரம்மம்' என்றும் குறிப்பிடலாம். ஆனால் 'வாக்கு' 'கால்வாசி - ப்ரம்மம்' தான்! முழுமை யான ப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்குதான் 'வாக்கு'. அதனுடைய இருப்பிடம் நமது உடலின் ஒரு பாகமான நாக்குதான்! பரமாத்மாவே அதற்கு ஆதாரமாகவும், ஆதரவாகவும், உதவிகரமாகவும் இருக்கிறார். அதனால்தான் பேசும்போது மிகவும் கவனமாக இருக்க வேண்டுமென்றும் சொற்களை யோசித்து உச்சரிக்க வேண்டுமென்றும் ஞானிகள் சொல்லியிருக்கிறார்கள். இந்த 'வாக்கு - ப்ரம் மத்தை' 'அறிவுத்திறன் என்பதாக வழிபட வேண்டும். இதற்கு 'பிரக்ஞை' என்றும் பெயருண்டு.

ஜனகர் : இந்த "வாக்கு - ப்ரம்மத்'தின் தன்மைகள் என்ன?

யாக்ஞ : எல்லா வேதங்களும், வேதாங்கங்களும், புராணங்களும், கலைகள், மந்திரங்கள், ஸ்லோகங்கள், ஆகியவையும் 'வாக்கு' மூலமாகத்தான் வெளிப் படுகின்றன. பரப்பப்படுகின்றன. உபதேசிக்கப் படுகின்றன. ஆகவே "வாய்மையே கடவுள்" சத்யமே உயர்தெய்வம்! உண்மையை மட்டும் பேசுபவன் தெய்வீகத் தன்மை பெறுகிறான். ப்ரம்ம தேவனின் பத்தினியான சரஸ்வதி "வாக்தேவதை" என்றும் "வாகேஸ்வரி" என்றும் அழைக்கப் படுகிறாள்.

ஜனகர் : மாமுனியே! வாயு தொடர்பான மூச்சு, சுவாசம், உயிர், பிராணன், பிராண - வாயு ஆகியவைதான் ப்ரம்மம் என்று மற்றொரு முனிவரான 'உதங்கர்' என்னிடம் சொன்னாரே?! உயிரில்லை எனில் வேறெந்த உறுப்பாலும் ப்ரம்மத்தாலும் எந்தப் பயனும் கிடைக்காதே!

யாக்ஞ : மன்னவா ... இந்த 'வாயு' வும் ப்ரம்மமே! இந்த 'வாயுப்ரம்மமும்' கால்வாசி ப்ரம்மம்தான். முழுமையான பிரம்மத்தின் 'நான்கில் ஒரு பகுதி! ப்ராணன்தான் இந்த 'வாயு'வின் இருப்பிடம். இதற்கும் ஆகாயமே ஆதாரமாகவும், ஆதரவாகவும் இருக்கிறது. பரம்பொருளே நம்முள் உயிராக, ப்ராணனாக, பிராணவாயுவாக உறைகிறது. ஆதலின் இதை நாம் 'அன்பு' 'நேசம்' பிரியம், என்பதாக வழிபட வேண்டும்.

ஜனகர் : ப்ராணனை நாம் எப்படி அன்புடனும் நேசத்துடனும் வழிபட வேண்டும்?

யாக்ஞ : எல்லா உயிரிகங்களின் செயல்பாடும் உயிருடனி ருப்பதற்காகவே அந்த உயிரை காப்பாற்றிக்

கொள்ளும் வகையில் அமைந்துள்ளது. உழைப்பது, உண்பது, யாகங்கள் செய்வது இப்படி எல்லாமே அந்த ப்ராணனை நேசிப்பதாகத்தான் அமைந்துள்ளன. வாழ்வது தான் ஒவ்வோர் உயிரினத்திற்கும் மிக முக்கியமாகும். அதனால் தான் இறந்து விடுவோமோ, யாராலாவது கொல்லப்படுவோமோ என்ற ப்ராணபயம் எல்லா உயிரினங்களிடமும் காணப்படுகிறது. உயிருக்கு ஆபத்து என்பதுதான் ஒவ்வொருவரிடமும் இருக்கும் மிகப் பெரிய பயம். ஆகவே ஒவ்வோர் உயிரினமும் தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள எங்கு வேண்டுமானாலும் ஓடிக் கொண்டே யிருக்கிறது. எனவே, உயிரை நேசிப்பவனே தெய்வீகமடைகிறான். அதை நேசிக்காமல் தற்கொலை செய்து கொள்ளும் வழக்கம் மனிதனைத் தவிர வேறெந்த உயிரினத்திலும் காணப்படுவதில்லை.

ஜனகர் : ஆம் மாமுனியே! ஆனால் கண்கள் தான் ப்ரம்மம் என்று 'பக்ருவர்ஷணர்' என்ற முனிவர் என்னிடம் கூறினாரே? கண் பார்வையற்றவரால் எதை சாதிக்க முடியும்?

யாக்ஞு : சூரியனின் அம்சமான கண்களும் ப்ரம்மமே! இந்த 'பார்வை ப்ரம்மமும்' கால்வாசி ப்ரம்மம்தான். முழுமையான ப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்கு. பார்வையின் இருப்பிடம் கண்களே. அதற்கு ஆதாரமாகவும், ஆதரவாகவும் இருப்பது பரம் பொருளே. அப்பரம் பொருளை, கண்களின் வழியாக 'உண்மை'யாக, 'சத்யமாக' வழிபட வேண்டும். பார்வையே சத்யம். காதுகளில், பிறர் சொல்வதைக் கேட்டு அதை உண்மை என்று நம்புவதை விட அவரவர் கண்களால் காண்பதே

'மெய்'. தனது பார்வையையே பரம்பொருளாக வழிபடுபவன் தெய்வீகத் தன்மையடைகிறான்.

ஜனகர் : நல்லது மாமுனியே! ஆனால் மற்றொரு முனிவர் என்னிடம் திசைகளின் தொடர்பான, காதுகளே ப்ரம்மம் என்று கூறினாரே? காதுகேளாதவரால் பெரிதாக என்ன சாதித்து விட முடியும்?

யாக்ஞ : மன்னவா... இந்த காதுகளும் கால்வாசி ப்ரம்மம் தான். முழுமையான ப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்குதான்! கேட்கும்திறன் காதுகளில்தான் இருக்கிறது. அதற்கு ஆகாயமே ஆதாரமாகவும், ஆதரவாகவும் உள்ளது. வாயு அதற்குத் துணை புரிகிறது. காற்றில்லாத வெற்றிடத்தில் ஒலி பரவுவதில்லை. அப்போது செவியால் எந்தப் பயனுமில்லை.

ஜனகர் : இந்த 'காது - ப்ரம்மத்தை' எவ்வாறு வழிபட வேண்டும்?

யாக்ஞ : காது - ப்ரம்மத்தை' எல்லையில்லலாதது, முடிவில்லாதது என்ற வகையில் வழிபட வேண்டும்.

ஜனகர் : எல்லையில்லாதவை எவை, முனியே?

யாக்ஞ : பரம்பொருளைப் போலவே, திசைகளும் எல்லை யில்லாதவை; முடிவற்றவை. ஒரு குறிப்பிட்ட திசையில் பயணப்பட்டால் விண்ணில் முடிவற்று போய்க் கொண்டே இருப்போம். ஆகவே நாம், இந்த வகையில் தான் 'காது ப்ரம்மத்தை' வழிபட வேண்டும்.

ஜனகர் : நல்லது மாமுனியே! ஆனால் 'ஜபலா' என்ற யோகினியின் மகனான சத்யகாமன், முன்பு

என்னிடம் 'மனது'தான் ப்ரம்மம் என்றாரே? நாம் அடைய விரும்புவதையெல்லாம் மனதால்தானே சிந்திக்கிறோம்?

யாக்ஞ : வேந்தே...! மனதும் கால்வாசி ப்ரம்மம் தான்! முழுமையான ப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்கு! மனமாகிய ப்ரம்மம் நமது சரீரத்தினுள்தான் உறைகிறது. ஆகாயமே அதன் ஆதாரமாகவும், ஆதரவாகவும் உள்ளது. இந்த ப்ரம்மத்தை நாம் 'ஆனந்தமாக'க் கருதி வழிபட வேண்டும்.

ஜனகர் : மனதுக்கு எதுவெல்லாம் ஆனந்தம் தரும்?

யாக்ஞ : மனிதன் மனதால் விரும்புவதை அடையும் போதெல்லாம் ஆனந்தமடைகிறான். விளையாட்டு, கல்வி, வீரம், செல்வம், பதவி, சிற்றின்பம், இனிய இல்லறம், மக்கட்பேறு, வசதியான இருப்பிடம், சுவையான உணவு, புகழ், - இப்படியாக மனதால் விரும்பும் எதை அடைந்தாலும் ஆனந்தமே! ஆனால் பரமாத்மாவை அடைவதே பேரானந்தம்! ஆதவே மனதைக் கட்டுக்குள் வைத்துக் கொண்டு, அதை ப்ரம்மமாக எண்ணி வழிபடுபவன் தெய்வீக நிலையடைகிறான்.

ஜனகர் : நல்லது மாமுனியே! ஆனால் உங்கள் தாய் மாமனும், முன்னாள் குருவுமான வைசம்பாயனர், முன்பு என்னிடம் புத்தி அல்லது அறிவு தான் ப்ரம்மம் என்று குறிப்பிட்டாரே? அறிவற்றவனால் எதையும் சாதிக்க முடியாதே?

யாக்ஞ : ராஜரிஷியே! அறிவாற்றலும் கால்வாசி ப்ரம்மமே! முழுமையான ப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்கு தான் புத்தி அல்லது அறிவு. அது நமது இதயத்தில் (மூளையில்) உறைகிறது. ஆகாயமே அதன்

ஆதரவாகவும், ஆதாரமாகவும் அமைந்துள்ளது. அறிவும் ஆகாயத்தைப் போலவே எல்லையற்றது. இந்த 'அறிவு ப்ரம்மத்தை' நாம் தள்ளாடாமல் உறுதியான மனத்தெளிவுடன் வழிபட வேண்டும்.

அவ்வாறு வழிபட்டு அறிவாற்றலுடன் செயல்படு பவனே எல்லாவித சாதனைகளையும் நிறைவேற்று கிறான். அவனிடம் தெய்வீகத்தன்மை வந்தடை கிறது.

ஜனகர் : 'ஸ்திதப்ரக்ஞன்' என்பவன் யார்?

யாக்ஞ : உறுதியான, நிலையான, அலை பாயாத, தெளிவான புத்தியும், அறிவாற்றலும் கொண்ட வனே 'ஸ்திதப்ரக்ஞன்' என்றழைக்கப்படுகிறான். பரப்ரம்மத்தை அடைவது மட்டுமே அவனது ஒரே குறிக்கோளாக இருக்கும்.

ஜனகர் : வாக்கு, உயிர், கண்கள், காதுகள், மனது, புத்தி என்ற ஆறு ப்ரம்மங்களும் ஒவ்வொன்றும் பரப்ரம்மத்தின் நான்கில் ஒரு பகுதி எனும் போது, இவற்றின் கூட்டுத்தொகை ஒன்றுக்கு மேலான 'பரப்ரம்மம்' என்பதாக வருகிறதே! இதை சற்று விளக்கவும்.

யாக்ஞ : மன்னவா! முழுமையான பரப்ரம்மத்திற்கு நான்கு 'கால்' பகுதிகள் தான். அதில் குழப்பமில்லை. இந்த ஆறு அம்சங்களுக்கும் அதிதேவதைகளான, "அக்னி" (வாக்கு) "வாயு" (உயிர்) "சூரியன்" (கண்கள்) "சந்திரன்" (மனது) மற்றும் "ப்ரம்மன்" (புத்தி) இவர்களெல்லாம் பரப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்கு. வாய், மூக்கு, கண்கள், காதுகள், மனது, இதயம் (மூளை) ஆகிய இந்த ஆறு உறுப்புகளும் ப்ரம்மத்தின் நான்கில் ஒரு பங்கு! இவை யெல்லா

வற்றிற்கும் ஆதாரமாக, ஆதரவாக விளங்கும் ஆகாயம் மற்றொரு கால் பங்கு; அறிவாற்றல், அன்பு, வாய்மை, முடிவில்லாத் தன்மை, ஆனந்தம் மற்றும் உறுதியாக இருத்தல் எனப்படும் ஆறு அம்சங்களும் மற்றொரு கால் பங்கு! இந்த நான்கு கால்பங்குகளும் சேரும் போது ப்ரம்மத்தின் முழுமை கிடைக்கிறது!

இந்த நான்கு பிரிவுகளும் இறைவனை அடைய உதவும் வழிகாட்டிகளாகவும் திகழுகின்றன. அவற்றை நன்குணர்ந்து கொள்பவன் 'தன்னை' உணருகிறான். வேதங்களின் பொருளையும், உள்ளடக்கத்தையும் அவனால் நன்கு புரிந்து கொள்ள முடியும்.

# 7. "ஆன்மாவுக்கு ப்ரபஞ்சத்துடன் உள்ள தொடர்பு" குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... எனது இறுதி இலக்கை அடைவ தற்கான வழிமுறைகளை விளக்கிக் கூறும்படி வேண்டுகிறேன்.

யாக்ஞ : மன்னவா... நீ ஒரு நல்ல ஆன்மா! எல்லோராலும் மதிக்கப்படுகிற சக்ரவர்த்தி! வேதங்கள், உப நிஷத்துக்கள் ஆகியவற்றைப் பயின்றவன் என்ப தால் ஓர் அமைதியும், கம்பீரமும் உன்னிடம் குடி கொண்டுள்ளன. ஆயினும் உன்னுடைய இறுதி இலக்கு என்ன என்பதில் தெளிவாக இருக்க வேண்டும். "உன்னை" அல்லது "உனது ஆண்மாவை" உணர்ந்து கொண்டால் போதுமா அல்லது அதற்கும் மேலான இலக்கு வைத்திருக் கிறாயா? உனது பூதவுடலை விட்டு உனது 'ஆன்மா' வெளியேறும்போது அது எங்கே போக வேண்டுமென விரும்புகிறாய்?

ஜனகர் : மன்னியுங்கள் மகரிஷியே ... இறந்தபிறகு நான் என்ன ஆவேன், எங்கே போவேன் என்று எனக்குத் தெரியவில்லை. இறுதி இலக்கு எது என்பதையும் நான் அறிந்திருக்கவில்லை. நடுக் காட்டில் இரவு நேரத்தில் மாட்டிக்கொண்ட ஒரு பார்வையற்றவன் போல திக்குத் தெரியாமல் அலைபவன் போலத்தான் என்னுடைய தேடலும் இருக்கிறது. எனது இறுதி இலக்கு எதுவாக இருக்க வேண்டும் என்பதையும் அதை அடையும் வழியையும், சூரியனின் மாணாக்கரான நீங்கள் தான் எனக்கு கற்பிக்க வேண்டும்.

யாக்ஞ : நல்லது மன்னவா... ஒரு நீண்ட கடினமான பயணத்தைத் தொடங்கும் மனிதன் எவ்வாறு குதிரை பூட்டிய ஒரு வாகனத்தையோ அல்லது படகையோ தேர்ந்தெடுத்துக் கொள்வது போல, ஒவ்வொரு மனிதனும், தான் இறப்புக்குப்பின் போக விரும்பும் இடத்திற்குத் தகுந்தார்ப்போல், வாகனத்தையும் தேர்ந்தெடுக்க வேண்டும்.

பொதுவாக மற்றவர்களை ஆர்வத்துடன் கேள்வி கேட்பவர்கள் இரண்டு வகைப்படுவர். முதல் வகையினர் எதைப் பற்றியும் சரியாகத் தெரிந்து கொள்ளாமலிருப்பவர்கள். இரண்டாம் வகையினர், நிறைய விஷயங்களைக் கற்றவர்களாக இருப்பார்கள். தாம் கற்றது சரிதானா என்று ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்வதற்காகவோ அல்லது எதிரிலிருப்பவனின் அறிவாற்றலை சோதனை செய்வதற்காகவோ கேள்விகளைக் கேட்பார்கள். தங்கள் இலக்கு எது என்றும் நோக்கம் எதுவென்றும் நிச்சயமாகத் தெரிந்து வைத்திருப்பவர்களுக்கு ஞானிகள் வழிகளை மட்டும் காட்டுவர்.

ஒன்றும் தெரியாதவர்களுக்கு, இலக்கையும் சுட்டிக் காட்டி அதை அடையும் வழிகளையும் விவரிப்பது தான் திறமையான ஆசிரியர்களின் வழக்கம். நீ எல்லா விவரமும் அறிந்தவன் என்பதால் உனக்கு 'ஆன்மா' குறித்தும் உடலுடன் அதற்குள்ள உறவையும் பிரபஞ்சத்துடன் அதற்குள்ள உறவையும் முதலில் விளக்குகிறேன்.

ஒவ்வொருவரும் 'தன்னை' உணருவது என்பதே 'தனது ஆன்மா'வை உணருவதாகும்.

தனிப்பட்ட ஒவ்வோர் ஆன்மாவும், அது 'விழித்திருக்கும் நிலையில்' பூத உடலின் அனுபவங்களை

அடைகிறது. 'விழித்திருக்கும் நிலை'யில் உள்ள 'ஆன்மா, தானே 'எழுவாய்' ஆகவும் செயல்படு பொருள் ஆகவும் இருக்கிறது. 'விஷயம்' ஆகவும் 'குறிக்கோள்' ஆகவும் இருக்கிறது.

'பிரபஞ்ச ஆத்மன்' ஆகிய பரப்ரம்மம் தனது 'மாயை'யால், பஞ்சபூதங்களையும் படைத்து அவற்றை உள்ளடக்கிய இந்தப் பிரபஞ்சத்தையும் படைத்து, தனது பேரொளி மூலமாக பிர பஞ்சத்தையும் பிரகாசப் படுத்துகிறது; வழி காட்டுகிறது. அசையும், அசையாப் பொருட்களை உள்ளடக்கிய இந்தப் பிரபஞ்சத்திற்கே ஒளியூட்டும் அந்த 'பரமாத்மா' சூரியனிடமிருந்தோ சந்திரனிட மிருந்தோ அக்னியிடமிருந்தோ அந்தப் பேரொளி யைப் பெறுவதில்லை. அவற்றைப் படைத்ததே பரமாத்மாதானே?! நமது உணர்வு மற்றும் செயல் பாட்டு உறுப்புகள் எதுவும் அந்த பரமாத்மாவை நெருக்கமாக அறிந்தவை அல்ல!

ஏனெனில் 'அது' வர்ணனைக்கு அப்பாற்பட்டது. எல்லாவற்றிற்கும் ஒளி கொடுக்கும் 'ப்ரமாத்மா' மிகுந்த பேரொளியைக் கொண்டதாகத் தானே இருக்க முடியும்?!

நமது வலது விழியில் பரமாத்மாவும் இடது வழியில் அதன் 'சக்தி'யும் நிலைத்திருப்பதாகக் கருதலாம். 'பரமாத்மா' கணவன் என்றால் 'சக்தி' தான் மனைவி.

விழித்திருக்கும் நிலையில் வலது கண்ணில் கணவ னாகவும் இடது கண்ணில் 'மனைவி'யாகவும் காணப்படும் 'பரமாத்மா' மகிழ்ச்சியான அனுபவங் களைப் பெறுகிறது; தூங்கும் நிலையில் கனவுகளில் அந்த அனுபவங்களைப் பெறுகிறது. (விழித்திருக் கும் நிலைக்கு 'பிரக்ஞை' என்றும் பெயருண்டு)

விரிந்து பரந்திருக்கும் ஆகாயமே, ஆன்மாவுக்கும் சக்திக்குமான 'இதயம்' எனக்கொள்ளலாம். அந்த இதயத்திலிருந்து பிரபஞ்சம் முழுவதும் விரவிக் கிடக்கும் மிக நுண்ணிய இரத்தக் குழாய்களென 'நாடிகளைக் குறிப்பிடலாம். அந்த நாடிகளின் வழியாகத்தான் 'சக்தி' பிரபஞ்சம் முழுவதும் பரவுகிறது. (மனித உடலில் உள்ள இதயத்திலிருந்து நாம் உண்ணும் உணவின் சத்துக்கள் இரத்தமாக மாறி, இரத்தக் குழாய்கள் மூலமாக உடலெங்கும் எடுத்துச் செல்லப்படுவதற்கு இணையானவை பிரபஞ்சம் முழுவதும் பரவியிருக்கும் 'சக்தி நாடிகள்!)

மனித உடலைப் பொருத்தவரை, இதயத்திலிருந்து மூளைக்குச் செல்லும் முக்கிய நரம்புக்கு 'சுஷும்ன நாடி' என்று பெயர். இந்த நாடி 'பிரம்மலோகம்' வரை நீட்டிக்கப் படக் கூடியது. ஞானிகள் பூதவுடலை விட்டு நீங்கும் போது அவர்களது 'சூட்சும உடல்' இந்த 'சுஷும்ன நாடி' வழியாகப் பிரம்மலோகத்தை அடைகிறது.

அதே போல பரமாத்மாவின் 'சக்தி' 'சுஷும்னநாடி' வழியாக மனித உடலுக்குள் நுழையும் போது மனிதர்கள் ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்கிறார்கள். இதயத்திலிருந்து அந்த 'சக்தி' மனிதக்கண்களை அடையும் போது மனிதர்கள் விழித்துக் கொள்ளுகிறார்கள். இதயத்துக்கும், கண்களுக்கும் இடைப்பட்ட பகுதியில் அந்த பரமாத்ம சக்தி, நிலை கொள்ளுமானால், மனிதனுக்கு 'கனவுகள் தோன்றுகின்றன.

மனிதன் உறங்கும் போது அவனது சூட்சும உடல் தனக்குத் தேவைப்படும் உணவையும் சக்தியையும் மனித உடலிலிருந்தே எடுத்துக் கொள்ளுகிறது.

அந்த கனவு நிலையில் மனிதனின் இடது கண்ணில் உறையும் 'சக்தி'யானது மனித மனத்தில் தோன்றும் விகாரங்களை உருவாக்குகிறது. ஆனால் தனி மனிதனின் ஆன்மாவானது, அவன் கனவற்ற நிலையில் உறங்குவதையே விரும்புகிறது. அந்த நிலைதான் மனித ஆன்மாவின் ஆனந்த நிலையாகும்.

ஜனகர் : மகரிஷியே... தாங்கள் சொல்வதைப் பார்த்தால் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் வேறு வேறு என்றாகிறதே?!

யாக்ஞ : அவை வேறு வேறானவையல்ல மன்னா! 'மாயை' யால் இவ்வாறு இரண்டாகத் தெரிகிறது. உண்மையில் பரமாத்மாவின் நீட்சிதான் ஜீவாத்மாக்கள். பரமாத்மா ஜீவாத்மாவில் வெளிப்படுகிறது. இந்த ப்ரபஞ்சம், பஞ்ச பூதங்கள், எட்டுத்திசைகள், கால நிர்ணயம், சேதன, அசேதனப் பொருட்கள், உயிரினங்கள், - எல்லாவற்றிலும் அந்தப் பரமாத்மாவே உறைகிறது. எங்கும் நிறைந்துள்ள பரமானந்தமே பரம் பொருள். பரமாத்மா இருக்கிறதா என்று தேட வேண்டிய தேவையே இல்லை. தேடி அடைவதும் கடினம். அது வேறானது என்று கருதுவதே அறியாமைதான்! அதைப்புரிந்து கொண்டு, அத்துடன் நமது ஜீவாத்மாவை ஐக்கியப் படுத்திக் கொள்ள முயலுவது மட்டுமே நம்மால் முடியும்! நமது கடமையும் அதுதான்.

ஒருவன் கனவு காணும்போது தன்னையே வேறு ஒருவனாகக் காண்பது போல்தான் ஜீவாத்மாவும் பரமாத் மாவும் . கனவு காணும் ஜீவாத்மா தன்னை பரமாத்மாவிட மிருந்து வேறுபடுத்திப் பார்க்கிறது, அவ்வளவுதான்!

# 8. மானிடர்க்கு வழிகாட்டும் ஒளியைக் குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... ஜீவாத்மாவும் பரமாத்மாவின் அம்சமே என்றாலும், ஒவ்வொரு ஜீவாத்மாவுக்கும் வழி காட்ட ஓர் 'ஒளி' தேவைப்படுகிறதே! அந்த ஒளி எது? பகல் நேரத்தில் வழிகாட்டும் ஒளியின் தோற்றுவாய் எது? அதன் 'தேஜஸ்' எவ்வகை யானது?

யாக்ஞ : மன்னவா... என்னதான் 'எல்லா'மே பரமாத் மாவின் அம்சம் என்றாலும், சுற்றுப்புறத்தைக் காண, ஒளி தேவைப்படுகிறது. பகலில் அந்த ஒளியை சூரியன் தருகிறது. சூரிய ஒளியின் உதவி யினால்தான் நாம் இயங்க முடிகிறது. பணியாற்ற முடிகிறது. சூரியனின் 'தேஜஸ்' காரணமாகவே நாம் லௌகீக காரியங்களையும், யாகங்கள் போன்ற வைதீக கர்மாக்களையும் நிறைவேற்ற முடிகிறது.

ஜனகர் : சூரியன் மறைந்ததும் நமக்கு ஒளியாக இருப்பது எது?

யாக்ஞ : சூரியன் மேற்கில் மறைந்ததும் நமக்கு ஒளியாக இருந்து வழி காட்டுவது சந்திரனே!

ஜனகர் : சூரியனும் மறைந்து சந்திரன் தேய்பிறையில் காணாமல் போகும் போது நமக்கு ஒளி காட்டுவது எது?

யாக்ஞ : சூரியனும் சந்திரனும் இல்லாத போது நமக்கு ஒளியாக இருப்பது நெருப்பே!

ஜனகர் : சூரியன், சந்திரன், நெருப்பு இந்த மூன்றும் இல்லாத போது மனிதனுக்கு ஒளியாக இருப்பது எது?

யாக்ஞ : மனிதனின் பேச்சுத்திறமையே அவனது ஒளியாகிறது!

ஜனகர் : பேச்சுக்கு 'தேஜஸ்' உண்டா?

யாக்ஞ : கும்மிருட்டில் நாம் இருக்கும் போது யாராவது பேசினால் அந்த ஒலியை வைத்து நாம் அவர் அருகே போக முடிகிறதல்லவா?! ஒலிதான் பேச்சின் 'தேஜஸ்'. இருட்டில் கூட பேச்சு மூலம் ஒருவருக்கொருவர் வழிகாட்டிக் கொள்ள முடிகிறதல்லவா?!

ஜனகர் : மாமுனியே. சூரியன், சந்திரன், நெருப்பு, பேச்சு ஆகிய நான்கும் 'ஒளி' என்றீர்கள்! இருட்டில் இருக்கும் ஒருவனுக்கு வாய் பேச முடியாது; அல்லது அருகில் வேறு யாருமே இல்லை; அல்லது வேறொருவர் அருகிலிருந்தும் அவர் பேசுவதைக் கேட்க முடியாமல் செவிடாக இருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அந்த நிலையில் அவனுக்கு ஒளியாயிருந்து வழி காட்டுவது எது?

யாக்ஞ : அப்படியொரு நிலையிலிருக்கும் ஒருவனுக்கு ஒளியாயிருந்து வழிகாட்டுவது அவனது 'ஆன்மா' மட்டுமே! ஆன்மாவின் 'ஒளி'யை அவன் புரிந்து கொண்டு இயங்க வேண்டும்; செயல்பட வேண்டும். 'வானப்ரஸ்தம்' மேற்கொண்டு வனத்திற்கு செல்லும் கிரஹஸ்தருக்கெல்லாம் அவர்களது 'ஆன்மா'வே ஒளியாயிருந்து வழி காட்டுகிறது. எந்தவொரு ஒளியில்லாத போதும்

மனிதனால் தனது உள்ளூறை ஒளியால் இயங்க முடியும்! மனித ஆன்மாவுக்கு வெளியிலிருந்து கிடைக்கும் எந்தவொரு ஒளியும் தேவைப் படுவதில்லை.

எல்லா இடங்களிலும் எல்லா நேரங்களிலும் 'ஆன்ம ஒளி' வழிகாட்ட முடியுமென்றாலும், சூரியன், சந்திரன், நெருப்பு, பேச்சு ஆகியன இல்லாத போது தான் 'ஆன்ம-ஒளி'யின் முக்கியத்துவம் உணரப்படுகிறது. தனிப்பட்ட ஆன்மாக்களின் ஒளியானது, 'ஹிரண்ய கர்ப்பம்' என்றழைக்கப்படும் 'பிரபஞ்ச மனதின் அங்கமே! அதன் பிரதிபலிப்பே! பரப்ரம்மம் தானே ஒளிரக் கூடியது 'மாயை'யின் ஒளியை அது பிரதிபலிப்ப தில்லை. அதன் 'மாயை'யைத்தான் சூரியன், சந்திரன், நெருப்பு, பேச்சு ஆகியவை பிரதிபலிக் கின்றன. இவை எல்லாம் மாயத் தோற்றங்களே!

## 9. விழிப்பு, உறக்கம், கனவு ஆகியவை குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... விழித்திருக்கும் போதும், உறங்கும் போதும், கனவு காணும் போதும் தனிப்பட்ட 'ஆன்மா'வின் நிலை எவ்வாறுள்ளது?

யாக்ஞ : மன்னவா... மனிதன் விழித்திருக்கும் போது அவனது 'தான்' என்ற அகங்காரத்தின் காரண மாக அவன் அனுபவிக்கும் துயரங்களையெல்லாம் அவனுள்ளே இருக்கும் 'ஆன்மா'வும் அனுபவிக் கிறது. கனவுகளே யில்லாத ஆழ்ந்த உறக்கத்தில் அவன் இருக்கும் நிலையில் அல்லது அவன் இறந்து விடும்போது, அவனது 'ஆன்மா' எந்த வொரு மகிழ்ச்சியையோ அல்லது துயரத்தையோ அனுபவிப்பதில்லை. அவன் உறக்கத்திலிருந்து விழிக்கும் போதும், அல்லது அவனது ஆன்மா மற்றொரு உடலில் நுழைந்து விடும்போதும், அதுவும் மீண்டும் 'விழிப்பு' நிலையை எடுக்கிறது.

இந்த இரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்ட 'கனவு காணும்' நிலையில் மனித ஆன்மா, விழிப்பு நிலையையும், அடுத்து வரக்கூடிய (தூக்கத்துக்குப் பிறகு அல்லது மரணத்துக்குப் பிறகு) நிலையையும் சீர்தூக்கிப் பார்க்கிறது. கனவுக்கும் மரணத்துக்கு மான ஒரே வேறுபாடு என்ன வெனில், மனிதன் கனவுகாணும் போது அவனது 'ஆன்மா' முழுமை யாக அவனது பூத உடலை விட்டு நீங்குவது மில்லை, அடுத்த உடலினுள் நுழைந்துவிடுவது மில்லை. ஆழ்ந்த உறக்கம் என்பது மரணத்துக்கு ஒப்பானது. கனவுக்குப் பின்னும், ஆழ்ந்த

உறக்கத்துக்குப் பின்னும் ஆன்மா 'விழிப்பு' நிலைக்குப் போகலாம். ஆனால் மரணத்துக்குப் பின் பழைய பூத உடலின் 'விழிப்பு நிலை'க்கு 'ஆன்மா' திரும்புவதில்லை. பாவ, புண்ணியங்களுக்கேற்ப மற்றொரு பூத உடலை அடைந்து அங்கு தான் மீண்டும் விழிப்பு நிலையை அடைகிறது. இதைத்தான் திருவள்ளுவரும்... "உறங்குவது போலும் சாக்காடு, உறங்கி விழிப்பது போலும் பிறப்பு..." என்று கூறியுள்ளார்) இந்த இடைப்பட்ட நிலைக்கு, 'சந்தியம்' என்று பெயர். அந்த நிலையில் அது அதன் முந்தைய பிறவிகள், அப்போதைய பிறவி, மற்றும் எதிர்வரும் பிறவிகள் குறித்தும் சிந்திக்கிறது. அதனால் தான் கனவுகள் தெளிவற்றதாக, குழப்பமாக நமக்குத் தோன்றுகின்றன.

கனவு நிலையில் 'ஆன்மா' தனக்குத் தானே ஒளியாயிருந்து வழிகாட்டிக்கொள்கிறது. தானே உருவங்களையும், பொருட்களையும் உருவாக்கிக் கொள்கிறது. பின்னர் தானே அவற்றை அழித்தும் விடுகிறது. விழித்திருக்கும் நிலையில் அறிந்திருக்காத காட்சிகளைக் கூட கனவு நிலையில், ஆன்மா எண்ணிப் பார்க்கிறது.

ஜனகர் : மாமுனியே ... உறக்கத்திலிருக்கும் ஒருவரை எழுப்பக் கூடாது என்று சொல்வது ஏன்?

யாக்ஞ : உறங்கும் அவன் கனவு கண்டு கொண்டிருக்கிறானா, ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறானா என்பது மற்றவர்களுக்குத் தெரியாது. அவன் ஆழ்ந்து உறங்கும் போது அவனது 'ஆன்மா' தற்காலிகமாக அவனது பூத உடலை விட்டு விலகி இருக்கலாம். அந்த நிலையில், அவனை எழுப்பினால், திடீரென்று அவன் 'விழிப்பு'

நிலைக்குத் திரும்புகிறான். விலகி இருக்கும் அவனது 'ஆன்மா' உடனடியாக எந்த உறுப்பின் மூலம் அவனது உடலுக்குள் நுழைவது என்று தெரியாமல், சற்றுத் தடுமாறும். இதனால் அவனது உடல்நிலை பாதிக்கப்படுகிறது.

உடல் முழுக்க ஆன்மா பரவுகிறது எனினும், எந்த பாகத்தில் அது முழுமையாக பரவ முடியாமல் போகிறதோ, அந்த உறுப்பு குணப்படுத்த இயலாத அளவுக்கு நோய்வாய்ப் படலாம். அவன் கண் பார்வையை இழக்கலாம்; காதுகள் கேட்காமல் போகலாம். ஏன்... அவன் இறந்து கூடப் போய் விடலாம். இந்தக் காரணத்தினால் தான் 'தூங்குப வரை எழுப்பக் கூடாது' என்று சொல்லப் படுகிறது.

ஜனகர் : மாமுனியே ... பரமாத்மாவும் ஜீவாத்மாவும் 'விழித்திருக்கும் நிலை'க்கும் 'கனவுகாணும் நிலைக்கும் எவ்வாறு சம்பந்தப்படுகிறார்கள்?

யாக்ஞ : மன்னவா... பரமாத்மாதான் வெளி, கால நிர்ணயம், பிரபஞ்சம், உயிரினங்கள் எல்லாவற்றை யும் உருவாக்குகிறது. ஆகவே, மனிதனின் 'விழித்தி ருக்கும் நிலையை' பரமாத்மா கட்டுப்படுத்துகிறது. ஜீவாத்மாவோ 'கனவுநிலை'யில் ஏராளமான பிம்பங்களையும், நிகழ்வு களையும் உருவாக்கி, அவற்றை தானும் அனுபவித்து, உறங்குபவரும் அனுபவிக்கும்படி செய்கிறது. அத்துடன் விழிப்பு நிலைக்கு உறங்குபவனைக் கொண்டு செல்கிறது. இதற்கு 'சுக்ரம்' என்று வேதங்கள் பெயர் கொடுத் துள்ளன. மனிதன் மீண்டும் உறங்கும் போது அவனை 'சந்தியம்' எனப்படும் கனவு நிலைக்கு' இட்டுச் செல்வதும் அவனது 'ஆன்மா'வே!

# 10. "ஆன்ம - ஞானம்" பிறவித் தளையிலிருந்து விடுதலை பெற உதவும் என்பது குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... ஆன்மாவைக் குறித்த அறிவு தான் பிறவித்தளையிலிருந்து விடுதலை பெற உதவு மென்றால், ஒருவனின் 'கனவு நிலையில்' ஆன்மா வும் 'காம - இச்சை' கொள்வதாகவும், 'விழிப்பு - நிலையில்' உணவின் சுவையை ஆன்மாவும் உணர்வதாகவும் தெரிகிறதே, அது எப்படி?

யாக்ஞ : மன்னவா ... கனவு நிலையிலும் சரி, விழிப்பு - நிலையிலும் சரி, 'ஆன்மா' எந்த விதமாக இச்சைகளையும் கொள்வதில்லை. இச்சைக ளெல்லாம் பூதவுடலைச் சார்ந்திருக்கும் உணர்வு களுக்கு மட்டுமே! பூதவுடல் உட்கொள்ளும் உணவு, ஆன்மாவுக்கான உணவல்ல! உடல் சார்ந்த காம இச்சைகளை ஆன்மா உணருவதில்லை. இந்த அண்ட வெளியில் ஏராளமான நட்சத்திரக் கூட்டங்களும், கிரஹங்களுமான பொருட்கள் நிரம்பியிருந்தாலும், ஆகாயம் எப்படி அவற்றுடன் எந்தவொரு பிணைப்பையும், பந்தத்தையும் ஏற்படுத்திக் கொள்வதில்லையோ, அது போலத் தான் ஆன்மாவும் தானுறையும் பூதவுடலின் இச்சைகளுக்கு ஆட்படுவதில்லை.

ஒருவனின் கனவு - நிலையில் அவன் காணும் பொருட்களும், மனிதர்களும், விலங்குகளும், பறவை களும், நிகழ்வுகளும் ஆன்மா அவனுக்குக் காட்டுப வைதான். ஆயினும் அவற்றுடன் ஆன்மாவுக்கு எந்தவொரு பற்றும் இல்லை. முற்பிறவிகளில் நிகழ்ந்தவற்றையும், வரும் பிறவிகளில் நிகழக் கூடிய

வற்றையும் தான் ஆன்மா உணர்ந்து கொண்டு, தான் சார்ந்திருக்கும் பூத உடலுக்கு அவற்றைக் காட்டு கிறது. தான் உருவாக்கிய காட்சிகளையும், பொருட் களையும் அதுவும் அனுபவிக்கிறதே தவிர, அவற்று டன் பந்தத்தை ஏற்படுத்திக் கொள்வதில்லை.

நாம் 'ஆன்ம - ஞானம்' பெறும்போது, ஆன்மா 'சமாதி நிலையை' அடைகிறது. அதுவரை, ஓர் ஆற்றில் நீந்திக் கொண்டிருக்கும் பெரிய மீனானது, வெள்ளத்தின் போக்கை எதிர்த்துக் கொண்டு எப்படி இக்கறைக்கும் அக்கறைக்குமாக நீந்து கிறதோ, அதைப் போல ஆன்மாவும் மனிதனின் 'விழிப்புநிலைக்கும்' 'கனவு நிலைக்கும்' மாறி மாறி இயங்கிக் கொண்டுதானிருக்கும்!

ஒரு கழுகு தனது இறக்கைகளை விரித்து விண்ணில் பல மணி நேரம் பறந்து கொண்டிருந்து விட்டு, பின்னர் இறக்கைகளை மடக்கி உடலுடன் சேர்த்துக் கொண்டு அசைவே இல்லாமல் கீழ் நோக்கி நேர்த்தியாக நழுவி வரும். தனது கூட்டில் வந்து அமரும். அதைப் போல கனவு நிலையில் அலை பாய்ந்து கொண்டிருக்கும் 'ஆன்மா' வானது, ஆழ்ந்த உறக்க நிலையில் (சுஷுப்தி) தன்னை ஒடுக்கிக் கொண்டு செயலற்று இருக்கும். அந்த நிலையில் அது எந்தவித மகிழ்ச்சியையோ, வேதனைகளையோ அனுபவிப்பதில்லை எந்தவித இச்சையும் கொள்வதில்லை. கிட்டத்தட்ட 'சமாதி' நிலையில் இருக்கிறது. பரமாத்மாவுடன் ஆலிங் கனத்தில் ஆழ்ந்து விடுகிறது. மனைவியை ஆரத்தழு வும் கணவனுக்கு எப்படி வேறெதுவும் கவனத்தில் இருப்பதில்லையோ, அதைப்போல பரமாத்மாவை தழுவி நிற்கும் ஜீவாத்மா வேறெதையும் எண்ணிப் பார்க்காத நிலை ஆழ்ந்த உறக்கத்தில் தான்

கிட்டுகிறது. இதுதான் 'மோட்ச நிலை'! இறப்பில் இது நிரந்தரமாகிறது.

கனவு - நிலையில் எதிரிகளால் கொல்லப்படுவது போலவும், யானைகள் துரத்துவது போலவும், மலை முகட்டிலிருந்து அதல பாதாளத்தில் விழுவது போலவும் தோன்றுவதெல்லாம் அஞ்ஞானத்தால் தோன்றும் பிரமைகளே! விழித்திருக்கும் நிலையில் அவையெல்லாம் தோன்றுவதில்லை. அது ஞானத்தால் விளைவது.

ஆத்ம - ஞானத்தின் மூலமாக இந்த அஞ்ஞானம் மறைகிறது. ஆன்மா பரமாத்மாவுடன் ஐக்யமாக வேண்டுமென்ற இச்சையைத் தவிர வேறெதுவும் தோன்றாது. எல்லாம் 'ஆன்ம-வடிவமே' என்று உணருவதுதான் 'மோட்சம்'.

விழித்திருக்கும் நிலையிலும், கனவு நிலையிலும் ஒவ்வொரு மனிதனும் சந்தோஷங்களையும் வேதனைகளையும் அனுபவிக்கிறான். ஆனால் ஆழ்ந்த உறக்க நிலையில் அந்த உணர்வுகள் எதுவுமே இருப்பதில்லை. அதுபோல, ஜீவாத்மா பரமாத்மாவுடன் இணைய விரும்பி 'சமாதி' நிலையை அடையும்போது 'வெளி' 'கால நிர்ணயம்' ஆகியவற்றைக் கடந்து, அஞ்ஞானத்தை அழித்து, 'மோட்ச' நிலையை எட்டுகிறது. விருப்பு-வெறுப்பு, மகிழ்ச்சி-வேதனை, பந்தம், பாசம், நேசம் - ஆகிய எல்லாமே மறைந்து விடுகிறது. வேதங்களையும், உபநிஷத்துக்களையும் ஒரு குருவிடமிருந்து முறையாகக் கற்றுக்கொள்ளும் போது, பரமாத்மாவுடன் நமது ஆத்மாவை ஐக்கியப் படுத்திக் கொள்வதெப்படி என்பதை நன்கு உணர்ந்து கொள்ள முடியும்.

# 11. மரணத்தின் போது ஜீவாத்மாவின் அவஸ்தைகள் குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... மனிதன் இறக்கும் நிலையில் அவனுள்ளே இருக்கும் ஆன்மாவுக்கு ஏதாவது வேதனைகள் ஏற்படுமா?

யாக்ஞ : மன்னவா... வேதனைகள் என்று சொல்வதை விட, பல கட்டங்களில் படிப்படியாகத்தான் 'ஆன்மா' பூத உடலிலிருந்து வெளியேறுகிறது என்று சொல்லலாம். அவற்றை 'அவஸ்தைகள்' என்று சொல்லலாம். (இந்த இடத்தில் 'அவஸ்தை' என்றால் துன்பம், வேதனை, துயரம் என்றெல்லாம் பொருள் கொள்ளக் கூடாது). எப்படி ஆன்மா வுக்கு தனியாக மகிழ்ச்சி என்று எதுவுமில்லையோ, அப்படியே வேதனை, துன்பம் என்றும் எதுவு மில்லை. ஆனால் ஆன்மா பல கட்டங்களில் வெளியேறும்போது மனிதக் காதுகளால் கேட்க இயலாத முனகலும், 'கிறீச்' என்ற ஒலியும் கிளம்புகின்றன.

ஏராளமான சுமை ஏற்றப்பட்ட கட்டை வண்டி எவ்வாறு கிறீச்சிடுமோ, எண்ணெய் தடவப்படாத கீல்கள் உள்ள கதவுகள் திறக்கப்படும்போதும், மூடப்படும்போதும் எவ்வாறு கிறீச்சிடுமோ, அவ்வாறே பரமாத்மாவினால் கண்காணிக்கப்படும் ஜீவாத்மா பூதவுடலிலிருந்து வெளி யேறும்போது, ஓசையெழும். வண்டியோட்டி சுமையேற்றப் பட்ட பாரவண்டி மீது ஏறி அமரும்போதும், இறங்கும் போதும் எப்படி 'கர்ண - கடூரமான' ஒலி எழுமோ அவ்வாறே மனிதன் தனது கடைசி

மூச்சை நிறுத்துவதற்கு முன்பு 'மேல் சுவாசம்' இழுக்கும்போதும் ஓசை எழும்.

நோயினாலும், வயதாகிவிட்ட காரணத்தினாலும் மனித உடல் மெல்ல மெல்ல வலுக்குறைந்து, நரம்புகளெல்லாம் தளர்ச்சியடைந்தவுடன் ஜீவாத்மா அந்த உடலிலிருந்து கழண்டு கொள்ளத் தொடங்குகிறது. பழுத்த இலைகள், வாடிய மலர்கள், வெம்பிய காய்கள் முற்றிய தேங்காய், ஆகியவை மரக்காம்புகளிலிருந்து உதிர்வது போல அது உதிருகிறது.

அந்தக் குறிப்பிட்ட மனித உடலும், அதன் உறுப்புக்களும் இனிப் பயனற்றவை என்று உணர்ந்து கொள்ளும் ஜீவாத்மா, வேறொரு உடலைத் தேடிக் கிளம்புகிறது. நகர்வலம் புறப் படும் மன்னனைச் சூழ்ந்து செல்லும் பிரதானிகள், அமைச்சர்கள், அதிகாரிகள் மற்றும் சேவகர்கள் போல, எல்லா நாடிகளிலிருந்தும் 'ப்ராணங்கள்' எல்லாம் ஒன்றுகூடி ஆன்மாவைச் சூழ்ந்து கொள்ளு கின்றன.

மற்றொரு பூதவுடலில் அந்த ஆன்மாவை வரவேற்பதற்காக வேறு சில பிரதானிகள், அமைச்சர்கள், சேவகர்கள் தங்கள் கைவசம் பானங்களையும் உணவையும் ஆயத்தமாக வைத்துக் கொண்டு காத்திருக்கிறார்கள்.

ஆன்மா வெளியேறும்போது எல்லாப் ப்ராணன் களும் அத்துடன் வெளியேறுகின்றன.

ஜனகர் : மகரிஷியே... ஆன்மா ஓர் உடலை விட்டு நீங்கி மற்றோர் உடலுக்குள் பிரவேசிப்பதாகக் கூறினீர்கள். முதல் உடலின் உறுப்புக்களிலிருந்து

அது எப்போது, எப்படி நீங்குகிறது என்பதைச் சொல்ல முடியுமா?

யாக்ஞ : மன்னவா... ஆன்மா முதலில் தனது பூத உடலின் இதயப் பகுதியிலிருந்துதான் வெளியேறத் தொடங்குகிறது. தனது சூக்கும உடலின் இதயப் பகுதிக்கு தனது சக்தியையும் ஒளியையும் செலுத்து கிறது. அடுத்ததாக பூத உடலின் கண்களின் ஒளி சூக்கும உடலின் கண்களுக்குள் நுழைகிறது. இதனால் இறந்து கொண்டிருப்பவனின் உடலின் அருகே இருப்பவர்கள் அவனின் கண்கள் மேலேறி சொருகிக் கொண்டு விட்டதாகக் கூறுகிறார்கள். அடுத்ததாக நாக்கு, தொண்டை, காதுகள், உணரும் சக்தி ஆகியவற்றின் சக்திகளெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக சூக்கும உடலுக்குள் நுழைகின்றன. அடுத்ததாக தொடு உணர்வு பூத உடலிலிருந்து நீங்குகிறது. இதனால் அவனை சுற்றியிருப்பவர்கள், உடலில் உணர்ச்சியேயில்லை என்று கூறத் தொடங்குகிறார்கள். அடுத்ததாக அவனது மனது (நினைவுகள்) அவனை விட்டு நீங்குகின்றன. அடுத்ததாக அவனது மூளையில் பதிந்துள்ள அறிவாற்றல் அத்தனையும் நீங்குகிறது. இறுதியாக அவனது நரம்பு மண்டலம் தனது சக்தியை இழக்கிறது. அவனது மூளை திடீரென்று பிரகாசமாகிறது. அந்த ஒளியுடன் அவனது ஆன்மாவும் (உயிரும்) அந்த பூத உடலை விட்டு நீங்கி, சுக்கும உடலுக் குள் முழுமையாக நுழைந்து விடுகிறது.

அவனது கடந்தகால கர்மவினைகளுக்கேற்ப, உடனடியாகவோ, சிலகாலம் கடந்தபிறகோ, அந்த 'ஆன்மா' மற்றொரு பூத உடலுக்குள் நுழைகிறது.

அப்போது, இறந்தவனின் கடந்தகால அனுபவங்கள், அவனது அறிவாற்றல், ஆகியவையும் ஆன்மாவுடனேயே புதிய உடலுக்குள்ளும் தொடர்கின்றன.

ஜனகர் : மாமுனியே... பழைய உடலை விட்டு நீங்கும் ஜீவாத்மா அடுத்த உடலுக்குள் எவ்வாறு நுழைகிறது என்று சொல்லுங்கள்.

யாக்ஞ : மன்னவா... இரண்டு உதாரணங்கள் மூலம் நான் உனக்குப் புரிய வைக்கிறேன்... ஒரு புல்லின் இதழின் மீது ஊர்ந்து செல்லும் கம்பளிப் புழு, அந்தப் புல்லின் நுனியை அடைந்தபின், அடுத்த புல்லுக்குத் தாவிப் போவதற்கு முன் தனது முழு உடலையும் குறுக்கிக் கொண்டுதான் அடுத்த புல்லுக்குத் தாவிப் போகிறது. அதைப்போல, இறந்தவனின் உடலிலிருந்து வெளியேறும் ஆன்மாவும் தன்னைக் குறுக்கிக் கொள்கிறது. கர்ம வினைக்கேற்றவாறு அடுத்த உடலுக்குள் தாவிச் செல்கிறது!

பொற்கொல்லர் ஒரு சிறு தங்கக்கட்டியை இளக வைத்து தட்டித் தட்டி தகடாக்கி அல்லது கம்பியாக நீட்டி, விதவிதமான நகைகளை உருவாக்குகிறார். அதைப் போலவே சிறுதங்கக் கட்டிபோல குறுகிப் போயிருக்கும் ஆன்மாவை, பரப்பிரம்மம், கந்தர்வர்கள், பிரஜாபதி, தேவதைகள், ப்ரம்மா ஆகியோரும் முன் கர்ம வினைகள், முன்னோர்களின் குணாதிசயங்கள், வடிவங்கள் - ஆகியவையும், பொற்கொல்லர்களாக மாறி தட்டியும், நீட்டியும், மற்றொரு உடலுக்குள் நுழைக்கிறார்கள். அதனால் தான் ஒவ்வொரு புது மனிதனுக்கும் மேற்சொன்ன அத்தனை அம்சங்

களும் அமைந்திருக்கின்றன. பரமாத்மாவின் அம்சமே ஜீவாத்மாவும் என்பதால், மனித உடலே பரமாத்மா உறையும் கோயிலாக மாறுகிறது.

ஜனகர் : புதிய உடலில் நுழையும் ஆன்மா எவ்வாறு செயல்படுகிறது அல்லது செயல்படுத்துகிறது?

யாக்ஞ : புதிய உடலின் செயல்பாடுகளை ஆரம்ப கட்டத்தில் ஆன்மாதான் தூண்டுகிறது. ஆயினும் அந்த மனிதனின் அறிவாற்றல் வளர வளர, அவனது மனம் சிந்திக்க, சிந்திக்க, அவனாகவே செயல்படத் தொடங்கி விடுகிறான். ஆன்மாவின் விருப்பத்திற்கேற்றவாறு செயல் படத் தொடங்குப வன், அந்த விருப்பங்களை மீறாதவரை, துன்பம் ஏதுமில்லை! தன்னிச்சையாகச் செயல்பட அவன் முயலும்போது பல நேரங்களில் அவனது ஆன்மா துயருறுகிறது; துன்பமடைகிறது; வருந்துகிறது; ஆகவே தான் அவன் நோய்வாய்ப் படுகிறான்; துயரமடைகிறான்; வலியும் வேதனையுமடை கிறான். ஆன்மாவின் விருப்பத்திற்கேற்றவாறு செயல்படுபவன் நூறாண்டுகளுக்குமேல் உடல் நலத்துடன் வாழ்கிறான்; எதிராக செயல்படுபவன் 'அல்பாயுசில்' மரணமடைகிறான். ஆக, விரும்பு வது ஆன்மா; செயல்படுவது மனித உடல்! கட்டுமீறிப் போகும் போது ஆன்மா அந்த உடலிலிருந்து வெளியேறி விடுகிறது.

ஜனகர் : மாமுனியே... ஜீவாத்மா ஏன் திரும்பத் திரும்ப பிறவியெடுக்கிறது?

யாக்ஞ : மன்னவா... மனிதனின் மனம் ஒரு குறிப்பிட்ட செயலில் விருப்பப்பட்டு அதனடிப்படையில் அவன் செயல்படும் போது, அவனது சூக்கும

உடலும் அதற்கு உடன்பட்டு செயல்படுகிறது. அந்த செயல்பாட்டின் விளைவை அந்த மனிதனின் மனமும், உடலும் எப்படி ஏற்றுக் கொள்ளுகின்றனவோ, அவ்வாறே சூக்கும உடலும் ஏற்றுக் கொள்கிறது. இப்படியாக தனது வாழ்நாள் முழுவதும் அவனது செயல்பாடுகளின் பயனை அவன் அனுபவிக்கிறான். அவனது செயல்பாடு களுக்கேற்றவாறு, இறப்புக்குப் பின் வேறு உலகிற்குச் செல்லும் அவனது ஆன்மா, அவனது கர்மங்களுக்கேற்றவாறு அந்த உலகில் தங்கிவிட்டு, மீண்டும் மற்றொரு உடலில் செயல்படுவதற் காக, நுழைந்து விடுகிறது. இப்படியாக, தனது செயல் பாடுகளின் பயனை அனுபவிக்க விரும்பும் ஒவ்வொரு மனிதனின் ஆன்மாவும் மீண்டும் மற்றொரு உடலில் மறுபிறவி எடுக்கிறது. வேறெந்தப் பயனும் தேவையில்லை - பரமாத்மா வுடன் இணைவதே நோக்கம் - என்று செயல் படும் மனிதன் (அவனுடைய ஆன்மா) மறுபிறவி எடுப்பதில்லை. அதுவரை இறப்பு - பிறப்பு என்ற இந்த வட்டம் தொடரவே செய்யும்! ஆசாபாசங் களில் அகப்பட்டுக் கொண்டு தவிக்கும் ஜீவாத்மா திரும்பத் திரும்ப பிறந்து கொண்டும் இறந்து கொண்டும்தான் இருக்கும்.

ஒரு குருவின் மூலமாக 'ப்ரம்ம-வித்தை'யை கற்று ப்ரம்ம-ஞானத்தை அடைபவர்கள் மட்டுமே பரம் பொருளை உணருகிறார்கள். அவர்கள் மீண்டும் பிறக்காமல் முக்தியடைகிறார்கள்.

'தனதென்று எதுவுமேயில்லை' - எல்லாமே ஆன்மா தான் என்றுணர்பவர்கள் மரணபயம் கொள்வ தில்லை. பயமில்லாதவர்களுக்கு அவஸ்தையில்லை.

மனதால் மட்டுமே பரப்ரம்மத்தை உணரமுடியும். தூய்மையான மனத்தில் 'பிரம்ம ஞானம்' உண்டாகும்.

ஜனகர் : மகரிஷியே.... 'வாக்கு' 'மனது' இரண்டுக்கும் அப்பாற்பட்டவர் 'பரப்ரம்மம்' என்று முன்பு குறிப்பிட்டீர்கள்... அப்படியிருக்கையில் பரப்ரம் மத்தையடைய மனது எப்படி ஒரு கருவியாக இருக்க முடியும்?

யாக்ஞ : மன்னவா... பரப்ரம்மம்தான் 'வாக்கு' 'மனது' ஆகியவற்றுக்கு அப்பாற்பட்டவர் என்று கூறினேனே தவிர, ஜீவாத்மா, அதாவது மனிதர் கள், பரப்ரம்மத்தை உணர தங்கள் வாக்கினால் பரமாத்மாவை குறித்து பாராயணம் செய்து, மனதால் தியானம் செய்யும்போதுதான், மனது தூய்மையடைந்து பரமாத்மாவை உணர முடியும்!

## 12. மரணத்திற்குப் பிறகு ஜீவாத்மா போகும் இடங்களைக் குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... ஒருடலிலிருந்து வெளியேறும் ஆன்மா, அம்மனிதனின் செயல்பாடுகளைப் பொறுத்து, சிறிது காலம் மற்றொரு இருப்பிடத்திற்குச் சென்று தங்கிவிட்டு, அதன் பிறகே இன்னொரு உடலுக்குள் நுழைந்து மறுபிறவியெடுக்கிறது என்று குறிப்பிட்டீர்கள். அப்படிப்பட்ட இடங்கள் எவையெவை என்று கூற முடியுமா?

யாக்ஞ : மன்னவா... ஒரு பாவியின் உயிர் அவனது மலக்குடல் வழியே வெளியேறுவதால் அவனது 'ஆன்மா' நரகத்திற்கு சென்று பலகாலம் உழலும். உடலுறவிலும் சிற்றின்பத்திலும் அதிக நாட்டம் கொண்டிருப்பவனின் உயிர் அவனது ஆண்குறி வழியாக வெளியேறுவதால் அவனது ஆன்மாவும் நரகத்திற்கே போகும். வயிற்றின் வழியாக உயிர் பிரிந்தால், அவனது ஆன்மா அவனது முன்னோர்கள் இருக்கும் 'பித்ரு' லோகத்துக்குப் போகும். சாப்பாட்டிலும் குடிப்பதிலும் அதிக ஈடுபாடு கொண்டிருப்பவனின் உயிர் அவனது வாய் வழியாக வெளியேறுவதாலும், வாசனைத் திரவியங்கள் மீது நாட்டம் உள்ளவனின் உயிர் அவனது மூக்கு வழியாக வெளியேறுவதாலும் அவர்களது ஆன்மாவும் 'பித்ரு' லோகத்துக்குப் போகும். இசையில் மிகுந்த ரசனையுள்ளவனின் உயிர் அவனது காது வழியாக வெளியேறுவதால், அவனது 'ஆன்மா' கந்தர்வலோகத்தை அடையும்;

கண்களின் வழியாக ஒருவனது உயிர் போனால், அவனது ‘ஆன்மா’ சூரிய, சந்திர அல்லது ‘அக்னி’ லோகத்திற்கு போகும். மிக நேர்மையான, உயர்ந்த மனிதர்களின் உயிர் அவர்களது உச்சந்தலை வழியாக வெளியேறுவதால், அவர்களது ஆன்மா ‘ப்ரம்மலோகத்’தை அடையும். இவையெல்லாம் முற்பிறவிகளில் செய்த ‘கர்மா’க்களின் கூட்டுத் தொகையின் அடிப்படையிலேயே அமையும்.

இப்படியாக முக்தியடையாத ஆன்மா ஒருடலிலி ருந்து விடுபட்டு, வேறொரு உலகத்தில் சிலகாலம் இருந்தபின், மற்றொரு உடலுக்குள் நுழைகிறது. அதேவேளையில் முந்தைய உடலின் மனமோ, அதன் எண்ணங்களோ, மூளையில் பதிந்துள்ள அறிவாற்றலோ, மற்றொரு உடலுக்குள் ஆன்மா வுடன் நுழைவதில்லை.

மேலும் ஆன்மா இந்த ப்ரபஞ்சம் முழுவதும் எங்கோ ஏதாவது ஓரிடத்திலுள்ள ஒரு தாவரம், பூச்சியினம், ஊர்வன, பறப்பன, விலங்குகள், மனிதர்கள் ஆகியோரில் ஒருடலில் நுழையுமென்ப தால் முன்பு மனித உடலில் இருந்த மனதும், எண்ணங்களும், அறிவாற்றலும் புதிதாக நுழைந்த உயிரின் உடலுக்குப் பொருந்துவதாக இல்லாமலி ருக்கலாம்; அல்லது தேவைப்படாமல் இருக்க லாம்! மற்றொரு மனித உடலுக்குள்தான் அந்த ‘ஆன்மா’ நுழையும் என்ற கட்டாயமுமில்லை!

ஜனகர் : மாமுனியே– கர்மபலன்களைப் பொறுத்து மனித ஆன்மா, பல லோகங்களுக்குச் சென்று சிலகாலம் தங்குவதாகச் சொன்னீர்கள். அடுத்த உடலுக்குள் நுழைவதற்குமுன் அந்த ஒவ்வொரு லோகங்

களிலும் ஆன்மாவுக்கு கிடைக்கக் கூடிய அனுபவங்கள் எவ்வாறிருக்கும்?

யாக்ஞ : மன்னவா... நரகத்தில் உழலும் ஆன்மா பல்வேறு துன்பங்களுக்கும் வேதனைகளுக்கும் உள்ளாகிறது.

தியாகங்கள் செய்த நல்ல மனிதனின் ஆன்மா, முதலில் 'பித்ரு' லோகத்திற்கு சென்று தனது மூதாதையர்களை சந்தித்து மகிழ்ச்சியுடன் சில காலத்தைக் கழிக்கிறது. பின்னர், அங்கிருந்து 'சுவர்க்கத்தை' அடைகிறது. மறுபிறவி எடுப்பதற்கு முன்பு அங்கு சிலகாலம் தங்குகிறது.

தனது உணர்ச்சிகளை அடக்கி, தியானம் செய்து, 'அஷ்டாங்க-யோகத்'தை பயிற்சி செய்த ஒருவனின் உயர்ந்த ஆன்மா, முதலில் வாயுலோகம், சூரிய மண்டலம், சந்திர மண்டலம் அகியவற்றைக் கடந்து செல்கிறது. தொடர்ந்து 'வருணலோகம்' இந்திரலோகம் ஆகியவற்றைக் கடந்து 'ப்ரம்ம லோகத்தை' அடைகிறது. இனிய நறுமணங்கள் சூழ்ந்திருக்கும் அந்த உலகில், தேவர்களின் தலைவனான இந்திரனுக்கு இணையாக மதிக்கப் பட்டு, அங்கு தங்கும் 'ஆன்மா' மறுபிறவிக்காகக் காத்திருக்கிறது.

# 13. "ஆசையெனும் சாத்தான்" - என்பது குறித்த உரையாடல்

ஜனகர் : மாமுனியே... கோபமும், ஆசையுமே முக்தி யடைவதைத் தடுக்கும் முட்டுக்கட்டைகள் என்று குறிப்பிட்டீர்கள். 'ஆசை'யின் உண்மையான தன்மை என்ன; அது எவ்வாறு முட்டுக்கட்டை யாக இருக்கிறது என்பதை விளக்க முடியுமா?

யாக்ஞ : மன்னவா.... 'ஆசை' என்பது 'காமம்', 'இச்சை' என்றும் அறியப்படுகிறது. பொதுவாக உடலுற வின் மீதும் சிற்றின்பத்தின் மீதும் உள்ள ஆர்வத்தை 'காமம்' என்று சொல்கிறோம். எப்படி அழைத்தாலும், 'பிறப்பு-இறப்பு' என்ற வட்டத் திற்கு அடிப்படையாக இருப்பது 'ஆசை'தான்! தனித்துப் பார்த்தால் 'ஆன்மா' தானாக இந்த ஆசை அல்லது இச்சையில் ஆர்வம் காட்டாது. உயிர்களின் அல்லது உயிரினங்களின் தோற்றம், வளர்ச்சி மற்றும் இறப்பு ஆகியவற்றிற்கு காரண மாக இருப்பது 'இச்சை'யே. ஆண் உயிரினமும், பெண் உயிரினமும் இச்சையால் கவரப்பட்டு இணை சேருவதால்தான் மற்றொரு உயிர் உருவா கிறது. இதனால் அந்த உயிரினம் தொடர்ந்து பிறப்பதும் இறப்பதுமாக நீடித்திருக்கிறது. எல்லா ஜீவாத்மாவும் புதிதாகப் பிறக்காமல் பரமாத்மா வுடன் ஐக்கியமாகி விட்டால் ப்ரபஞ்சமே சூன்யமாகிவிடும். ஒரு நுண்ணுயிரிலிருந்து, மனிதர்கள், அசுரர்கள் வரை இப்படித்தான் தொடர்ந்து இருந்து வருகிறார்கள். (தேவர்கள் புதிதாகப் பிறப்பதுமில்லை. அவர்களுக்கு வாரிசு

களும் இல்லை; அமிர்தத்தை அருந்தியதால் அவர்களுக்கு இறப்புமில்லை)

அவர்களின் 'ஆசை' செயல்படத் தூண்டுகிறது; செயல்பாட்டின் விளைவாக புது உயிர்கள் தோன்றுகின்றன; ஏற்கெனவே இருக்கும் உயிர்களுக்கு இதனால் 'கர்மவினை'யும் 'கர்மபலனும்' கூடுகிறது. அதன் விளைவால், அவர்களின் இறப்புக்குப் பின் அவர்களின் 'ஆன்மாக்கள்' புது உடல்களுக்குள் நுழைவதால், உயிரினங்கள் மீண்டும் மீண்டும் பிறக்கின்றன.

எல்லா உயிரினங்களின் இச்சையும் இன்பத்தைக் குறி வைத்தே நிறைவேற்றப்படுகின்றன; ஆனால் அவை பெரும்பாலும் துன்பத்தையே அடைகின்றன. இன்ப-செயல்பாட்டில் ஈடுபடுத்தப்படும் எல்லா ஆசைகளுமே இன்பத்தைத் தந்து விடுவதில்லை. அதோடு கிடைக்கும் இன்பத்தின் அளவும் உயிருக்குயிர் வேறுபடுகிறது. இந்த 'மாய' உலகில் உருவெடுக்கும் எல்லா உயிரினங்களும் ஆசையினால், ஏதாவதொரு வகையில் துன்பத்தையும், துயரத்தையுமே அடைகின்றன.

கர்ம - பலனின் காரணமாக சுவர்க்கத்திற்குப் போகும் ஆன்மாவும் நரகத்துக்குப் போகும் ஆன்மாவும் மீண்டும் மற்றொரு பிறவியை எடுத்தே திரும்புகின்றன.

ஜனகர் : மாமுனியே... 'ப்ராரப்தகர்மா' என்பது என்ன? அதன் விளைவுகள் என்னென்ன?

யாக்ஞ : மன்னவா... முந்தைய பிறவிகளில் ஏராளமான இச்சைகளை வளர்த்துக் கொண்டு, அவை நிறைவேறாத நிலையில் மரணமடைந்த உயிரினங்கள்,

இப்போதைய பிறவியில் அத்தகைய இச்சைகளை இறப்பதற்கு முன் நிறைவேற்றிக் கொள்ளுகின்றன. அவ்வாறு நிறைவேறிய உடன் அந்த உயிரினத் திற்கு மரணம் நேருகிறது. இப்போதைய பிறவியில் அது ஏற்படுத்திக் கொண்டுள்ள - ஆனால் நிறை வேறாத - இச்சைகளை நிறைவேற்றிக் கொள்வதற் காக அவை மீண்டும் பிறவியெடுக்கின்றன. இதுதான் 'ப்ராரப்தகர்மா' எனப்படுவது.

ப்ராரப்தகர்ம வினையின் அளவு அதிகமாக அதிகமாக, பிறவிகளும் தொடரும்! ஏதாவது ஒரு பிறவியில் இச்சைகள் குறையத் தொடங்கும் போதுதான், அந்த 'ஆன்மா'வானது முக்திக்கான பாதையில் அடியெடுத்து வைக்கிறது. அப்படியும், இப்போதைய பிறவியில் செய்யப் பட்ட நற்செயல் களின் ('சஞ்சிதகர்மா') பயன் இப் பிறவியிலேயே கிடைத்து விடுவதில்லை. அடுத்த பிறவியிலும் அது தொடர்ந்து வரும். அடுத்தடுத்த பிறவிகளிலும் இந்த 'சஞ்சித கர்மா' தொடருமானால், ஒரு கட்டத்தில் முக்தி கிடைக்கும்.

ஜனகர் : 'சஞ்சித கர்மா' தொடருவதற்கு என்ன செய்ய வேண்டும் முனிவரே?

யாக்ஞ : 'இச்சை'யைத் தவிர்க்க வேண்டும் மன்னவா! உயிரினங்களின் 'மனது' தான் இந்த ப்ரபஞ்சத்தின் தோற்றத்துக்கே காரணம்! மனதுதான் எல்லா செயல்பாடுகளுக்கும், அஞ்ஞானத்துக்கும் நிகழ்வு களுக்கும் அடிப்படை. இச்சையை முற்றிலுமாக ஒழித்தவனின் ஆன்மாவானது மகிழ்ச்சியையோ, வேதனையையோ அடைவதில்லை. அவனது சூக்கும உடல்தான் பாதிப்படைகிறது. எல்லா உயிரினங்களுக்கும் சுவாசமிருக்கிறது. பிராணன்

அந்த சுவாசத்தை நம்பியிருக்கிறது. இச்சையை ஒழித்தவன் அவனது 'ஸ்திதப்ரக்ஞை'யின் காரணமாக, அந்த பிராண வாயுவின் சுவாசத்தைக் கூட அலட்சியப்படுத்துவது போலக் காட்சியளிக்கிறான். ஏனெனில் அவன் மகிழ்ச்சியையும் வேதனையையும் சமமாகவே பாவிக்கிறான்.

அவனுக்கு தனது பத்து வகையான உணர்வு உறுப்புக்களும், ஐந்து இந்திரியங்களும், பூத உடலும் பொருட்டானவை அல்ல! அவன் பிற மனிதர்களாலோ, பொருட்களாலோ பாதிக்கப் படுவதில்லை. அவன் எல்லாவற்றிலிருந்தும் 'விடுதலை' பெற்றவனாகக் காணப்படுகிறான்.

அந்த நிலையில் அவன் 'இச்சையற்றவன்' (நிஷ்காமன்) என்ற நிலையை எய்துகிறான். எப்படி ஆழ்ந்த, கனவுகளற்ற, உறக்கத்தில் ஆழ்ந்திருப்பவன் எந்தவித இச்சைகளுக்கும் ஆட்படுவதில்லையோ, அப்படியே இந்த 'நிஷ்காமனும்' ஆகிவிடுகிறான்.

இப்படிப்பட்ட நிலையை அடைவதன் மூலமே 'சஞ்சிதகர்மா'வைத் தொடரச் செய்ய இயலும்.

ஜனகர் : 'நானே பரப்ரம்மம்' ('அஹம் ப்ரம்மாஸ்மி') என்ற நிலையை ஒருவன் எப்படி அடைகிறான்?

யாக்ஞ : மன்னவா- இச்சைகளை ஒழித்தவன் 'நிஷ்காமன்' ஆகிறான் என்று சொன்னேன். அவனது தூய்மையான மனது, ஆன்மிக உணர்வு ஆகியவற்றின் காரணமாக, எல்லா உயிர்களிலும், எல்லா பொருட்களிலும் பரமாத்மாவை அடையாளம் கண்டு 'ஆன்மகாமன்' ஆகிறான். அந்த நிலையில் இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே 'தான்' என்றுணர்

கிறான். அப்போதுதான் 'நானே பரப்ரம்மம்' என்ற நிலையை அடைகிறான்.

அப்படிப்பட்டவனே தனது பூதவுடலையும், பிராணனையும் துறந்து அவனது சூக்கும உடலும் சூன்யமாகி (அதாவது எந்தவொரு பாதிப்புமில்லாமல் வெறுமையாக இருக்கும்போது) அவனது ஆன்மா முக்தியடைந்து பரமாத்மாவுடன் ஐக்கியமாகிறது.

எப்படி களிமண்ணிலிருந்து உருவாக்கப்பட்டு, பொருட்களை தன்னுள்ளே வைத்துக் கொள்ளப் பயன்படும் மண்பானை உடைந்ததும் மண்ணோடு மண்ணாகி விடுகிறதோ, அவ்வாறே இந்த ஜீவாத்மாவும் பரமாத்மாவுடன் கலந்து விடுகிறது. அந்தப் பானையின் 'வெளி'யானது 'அண்டவெளியுடன்' இரண்டறக் கலப்பது போல!

இச்சையெனும் விதை இல்லாதபோது, உலகமென்னும் மரம், தனது மாயத் தோற்றத்தை இழந்து விடுகிறது. ஆன்மாவைக் குறித்த ஞானமில்லாத போதுதான் 'இச்சை' எனும் விதை முளைவிடத் தொடங்குகிறது.

ஜனகர் : மாமுனியே... முக்தியடைவதில் கூட 'ஜீவன் முக்தி' 'விதேகமுக்தி' என இரண்டு வகைகள் இருப்பதாக கற்றறிந்தோர் சொல்கிறார்களே?

யாக்ஞ : ஆம் மன்னவா! ஒருவனது 'ஆன்மா' அப்போதைய பூதவுடலுடன் தனது அடையாளத்தை உதறித் தள்ள முற்படும்போது 'விடுதலை பெற்ற ஆன்மா' என்றாகிறது. ஆசா பாசங்களிலிருந்து விடுபட்ட நிலையில் பரப்பிரம்மத்தை உணர்ந்து கொண்டு ஒருவன்

தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பானானால், அவனது ஆன்மா 'ஜீவன் - முக்தி' அடைந்து விட்டதாகப் பொருள். அந்த நிலையில் அவன் தனது உடலையே உதறித் தள்ளி, அவனது ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்யமடைவது 'விதேக-முக்தி' என்றழைக்கப்படுகிறது.

'ஜீவன் முக்தி' அடைந்து தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கும் ஒருவனது உடல் வாழத் தேவையான உணவு, அவனது 'பிராரப்தகர்ம' வினையின்படி, அவன் எந்தவொரு முயற்சி செய்யாத நிலையில்கூட, தொடர்ந்து கிடைத்துக் கொண்டிருக்கும். ஆனால் ஆந்த 'ஜீவன்-முக்தர்' உணவின் சுவையையும் உணரமாட்டார். பெண்ணின் கருவில் வளர்ந்து கொண்டிருக்கும் குழந்தை எவ்வாறு உணவின் சுவையை அறியாத நிலையிலேயே தாயின் இரத்தத்தின் மூலம் வந்து சேரும் உணவைப் பெற்றுக் கொண்டு வளருகிறதோ, அவ்வாறே, ஜீவன்-முக்தரும் ஆசையும், உணர்வும், சுவையும் இல்லாமலேயே கிடைக்கும் உணவை உண்டு வாழ்ந்து கொண்டிருப்பார். 'பிராரப்த கர்மவினை' முடியும்போது அவர் 'விதேக முக்தி' அடைகிறார்.

# 14. 'பிரம்மத்தை உணருவதே' முக்திக்கான வழி

ஜனக மன்னர் : மகரிஷியே, ஒவ்வொருவரும் தனது 'ஆன்மா'வை உணர்ந்து கொள்வதே 'ஆன்மிகம்' என்று சொன்னீர்கள். தத்தமது ஆன்மாவை ஒவ்வொருவரும் உணருவது எங்ஙனம்?

யாக்ஞர் : கவனமாகக் கேள் மன்னவா... கறை படியாத, தூய்மையான மனதுள்ளவர்கள் மட்டுமே அவரவர் ஆன்மாவை உணர்ந்து கொள்ள முடியும். வேதாந்தக் கருத்துக்களைப் புரிந்து கொண்டால் மட்டும் போதாது; மனதையும் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். மிகவும் உயர்வான அந்த இலக்கை அடைவதே ஒவ்வொருவரின் கடமையுமாகும். நான் வெளிக் கொணர்ந்த 'சுக்ல யஜுர் வேதத்தின்' மந்திரங்களும், பிராம்மணங் களும் அந்தப் புரிதலுக்கான வழியைக் காட்டும் விதமாகவே அமைந்துள்ளன. தனது 'ஆன்மா'வை உணர்ந்து கொள்பவனே 'பரப்ரம்மத்தை'யும் உணருகிறான். அந்த வழிமுறையே 'பிரம்ம-வித்யை' என்றழைக்கப் படுகிறது.

எல்லா நதிகளும் இறுதியாகக் கடலில் சென்று சேர்வதுபோல, எல்லா 'ஆன்மாக்களும்' இறுதி யில் பரமாத்மாவுடன் ஐக்கியமாகின்றன.

தனது ஆன்மாவை உணர்ந்து கொண்டவன் வலி, வேதனை, பயம், துக்கம், விருப்பு, வெறுப்பு, ஆகியவற்றிலிருந்து விடுதலை பெறுகிறான். அத்துடன் 'தான்' என்ற அகங்காரத்தை துறக்

கிறான். தியானம், யோகம் ஆகியவற்றின் மூலம், தனது 'ஆன்மா'வை உணர்ந்து கொள்பவன், 'ப்ரம்ம-ஞான'த்தைப் பெறுகிறான். அந்தப் 'ப்ரம்ம-ஞானி' பரப்ரம்மத்தை உணர்ந்து கொண்டு அத்துடன் இரண்டறக் கலக்கிறான்.

ஜனகர் : மாமுனியே... இல்லறத்தில் ஈடுபட்டுள்ளவர்களால் தங்களது 'ஆன்மா'வை உணர்ந்து கொள்ள முடியாதா?

யாக்ஞர் : அப்படியில்லை மன்னவா! இல்லறத்தில் உள்ளவர்கள்கூட ஐந்து விதமான 'அக்னி'யை (பஞ்சாக்னி) வழிபட்டு, தியானம் செய்வது மூலமாக, தங்கள் 'ஆன்மா'வை உணர முடியும்! காட்டில் வாழும் முனிவர்களும், 'வானப்ரஸ்த' மாக காட்டுக்குப் போனவர்கள்கூட, 'பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடித்து தமக்கு விதிக்கப்பட்டுள்ள 'கர்மா'க்களை நிறைவேற்றுவதன் மூலம் 'ஆன்மா'வை உணரமுடியும். அதே வேளையில், பாவம் செய்பவர்களும், குற்றம் புரிபவர்களும், உயிர்களுக்குத் தீங்கு செய்பவர்களும், எந்த வகையிலும் தங்கள் 'ஆன்மா'வை உணர முடியாது. இல்லறத்தில் இருப்பவரோ, வானப்ரஸ்தத்தில் இருப்பவரோ அல்லது சன்யாஸம் பூண்டவரோ, யாராக இருந்தாலும், ஆசா-பாசங்களைத் தவிர்த்து, இந்திரியங்களை அடக்கி, தமது கருமங்களை கண்ணும் கருத்துமாக நிறைவேற்றி, தியானத்தையும், யோகத்தையும் கடைப்பிடித்தால் மட்டுமே தமது 'ஆன்மா'வை உணர்ந்து கொள்ள முடியும். அதன் மூலம் பரமாத்மாவை உணர முடியும். இதுவே முக்திக்கான வழியாகும்.

இறந்த காலம், நிகழ்காலம் மற்றும் வருங்காலம் ஆகியவற்றை உய்த்துணரும் சக்தி மனித மனங் களுக்குண்டு. ஆனால் மனதை நிலை நிறுத்தவும், நேர்த்தியான தீர்மானம் கொள்ளவும் இயலாமல் தவிப்பதும் மனித மனங்கள்தான்! நிலைப்படுத்தப் பட்ட மனம்தான் 'பிரக்ஞை' எனப் படுகிறது. அந்த 'பிரக்ஞை'தான் 'ஆன்மா'வை அடை யாளம் கண்டு கொள்ளும். அதற்கு தியானமும், யோகமும் உதவும்.



# துணைநூல் பட்டியல்


1. யோகீஸ்வர யாக்ஞவல்கியா (ஆங்கிலம்)
   – E.R. கிருஷ்ணமூர்த்தி (1984)
2. கண்வகுரு வாஜசனாய யாக்ஞவல்கியர் (தெலுங்கு)
   – லட்சுமிபதி சாஸ்திரி
3. யாக்ஞவல்கிய ஸ்மிருதி
4. சுக்ல யஜுர் வேதம் (கண்வ சாகை)
5. யாக்ஞவல்கிய முனிவர்
   – ஸ்வாமி மாதவானந்தா, அத்வைத ஆஸ்ரமம், கல்கத்தா
6. பிருகதாரண்யக உபஷத்
7. ஈசாவாஸ்ய உபநிஷத்
8. சதபாத ப்ராம்மணம்
9. மகாபாரதம் – வேத வியாசர்
10. ஸ்கந்த புராணம்
11. விஷ்ணு புராணம்
12. ஸ்ரீமத் பாகவதம்
13. பிரம்மாண்ட புராணம்

# துணைநூல் பட்டியல்


1. யோகீஸ்வர யாக்ஞவல்கியா (ஆங்கிலம்)
   – E.R. கிருஷ்ணமூர்த்தி (1984)
2. கண்வகுரு வாஜசனாய யாக்ஞவல்கியர் (தெலுங்கு)
   – லட்சுமிபதி சாஸ்திரி
3. யாக்ஞவல்கிய ஸ்மிருதி
4. சுக்ல யஜுர் வேதம் (கண்வ சாகை)
5. யாக்ஞவல்கிய முனிவர்
   – ஸ்வாமி மாதவானந்தா, அத்வைத ஆஸ்ரமம், கல்கத்தா
6. பிருகதாரண்யக உபஷத்
7. ஈசாவாஸ்ய உபநிஷத்
8. சதபாத ப்ராம்மணம்
9. மகாபாரதம் – வேத வியாசர்
10. ஸ்கந்த புராணம்
11. விஷ்ணு புராணம்
12. ஸ்ரீமத் பாகவதம்
13. பிரம்மாண்ட புராணம்

## ஆசிரியரின் பிறநூல்கள்

1. யாக்ஞவல்கியர்
2. யாக்ஞவல்கிய ஸ்மிரு
3. யாக்ஞவல்கியர் ஜனகமன்னர் உரையாடல்கள்
4. யாக்ஞவல்கியர் விவாதங்கள்
5. தமிழ் இசை மரபு
6. திரைக்கதை எழுத புதுப்புது உத்திகள்
7. ஜே.ஆர்.டி. டாடா
8. மார்டன் தியேட்டர் டி.ஆர். சுந்தரம்

